# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்

# 1. உலகக்கோப்பை கால்பந்து திருவிழா 2022

நமது நிருபர் நவம்பர் 19, 2022

ஒலிம்பிக் தொடருக்கு அடுத்து முதன்மையான திருவிழாவாக இருப்பது உலகக்கோப்பை கால்பந்து தொடராகும். 4 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் இந்த உலகக்கோப்பை கால்பந்து தொடரின் 22-வது சீசன் அரபு நாடான கத்தாரில் விடுமுறை நாளான ஞாயிறன்று துவங்குகிறது. டிசம்பர் 18 வரை நடைபெறும் இந்த தொடரில் மொத்தம் 32 அணிகள் பங்கேற்கிறது.

**துவக்க ஆட்டம்**

கத்தார்- ஈக்வடார் நேரம் இந்திய நேரப்படி இரவு 9.30 மணி இடம் அல்பாய்த் மைதானம்

### பரிசுத்தொகை

மொத்த பரிசு தொகை ரூ.3586 கோடியாகும். கடந்த சீசன் முறையை விட ரூ.328 கோடி கூடுதலாக பரிசு தொகை அதிகரிக்கப்பட்டுள்ளது. 2018-ஆம் ஆண்டு ரஷ்யாவில் நடைபெற்ற 21-வது சீசன் உலகக்கோப்பையில் வழங்கப்பட்ட பரிசு தொகை ரூ.3258 கோடியாகும்.

சாம்பியன் பட்டம் : ரூ.344 கோடி (42 மில்லியன் டாலர்)

2-ஆம் இடம் : ரூ.245 கோடி (30 மில்லியன் டாலர்)

3-ஆம் இடம் : ரூ.220 கோடி (27 மில்லியன் டாலர்)

4-வது இடம் : ரூ.204 கோடி (25 மில்லியன் டாலர்)

5 முதல் 8-வது இடம் வரை : ரூ.138 கோடி (17 மில்லியன் டாலர்)

9 முதல் 17-வது இடம் வரை : ரூ. 106 கோடி (17

மில்லியன் டாலர்)

17 முதல் 32-வது இடம் வரை : ரூ. 74 கோடி (9 மில்லியன் டாலர்)

உலகக்கோப்பை தொடரில் களமிறங்கும் 32 அணிகளுக்கும் கண்டிப்பாக குறைந்தபட்சம் ரூ.70 கோடிக்கு மேல் பரிசுத் தொகை கிடைத்துவிடும். வெறுங்கையுடன் யாருமே நாடும் திரும்ப மாட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

**பிரிவுகள்**

குரூப் ஏ: கத்தார், ஈக்வடார், செனகல், நெதர்லாந்து குரூப் பி: இங்கிலாந்து, ஈரான், அமெரிக்கா, வேல்ஸ் குரூப் சி: அர்ஜெண்டினா, சவூதி அரேபியா, மெக்சிகோ, போலந்து குரூப் டி: பிரான்ஸ், ஆஸ்திரேலியா, டென்மார்க், துனிஷியா குரூப் இ: ஸ்பெயின், கோஸ்டா ரிகா, ஜெர்மனி, ஜப்பான் குரூப் எப் : பெல்ஜியம், கனடா,

மொராக்கோ, குரேசியா குரூப் ஜி: பிரேசில், செர்பியா, சுவிட்சர்லாந்து, கேமரூன் குரூப் எச்: போர்ச்சுகல், கானா, உருகுவே, தென் கொரியா

**தனி கிராமம்...**

தங்குமிடத்திலேயே நட்சத்திர விடுதிகள், வில்லாக்கள், ஓய்வு விடுதிகள், விளையாட்டு அகாடமி குடியிருப்புகள், தற்காலிக வீடுகள் என 32 நாடுகளின் வீரர்களுக்கு ஒரு குட்டி கிராமத்தையே பிரித்து கொடுத்துள்ளது கத்தார் அரசு. சொந்த நாடாக இருந்தாலும் கத்தாருக்கு சிறப்பு வசதிகள் எதுவும் கிடையாது.31 நாடுகளுக்கு வழங்கப்படும் சரிசமமான வசதிகள்தான். ஜெர்மனி, சவூதி அரேபியா, பெல்ஜியம் ஆகிய நாடுகள் மட்டுமே தலைநகர் தோஹா பகுதியில் சாராமல் கத்தார் நாட்டின் எல்லை பகுதிகளில் தங்கியுள்ளது. மற்ற 29 நாடுகளும் தோஹா தலைநகர் வட்டத்தில் தான்

தங்கியுள்ளது.

**இந்தியாவில்...**

ஸ்போர்ட்ஸ் 18, ஸ்போர்ட்ஸ் 18 (எச்டி) இலவசமாக காணலாம்

ஆன்லைன் பிளாட்பாரம் : ஜியோ சினிமா (JIO CINIMA), ஜியோ வாடிக்கையாளர்கள் மட்டுமின்றி மற்ற தொலைத்தொடர்பு வாடிக்கையாளர்களும் ஜியோ சினிமா மூலம் இலவசமாக பார்க்கும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதுதவிர வூட் (VOOT) மொபைல் ஆப் மூலமும் போட்டிகளை நேரலையில் காணலாம். இதற்கு சந்தா கட்டணம் செலுத்த வேண்டும்.

**உதை வாங்க தயாராக இருக்கும் மைதானங்கள்**

**அல் பேத்(அல் ஹோர்)**

அல் ஹோர் நகரில் அமைந்துள்ள இந்த மைதானம் கத்தாரின் நாடோடி மக்களால் பயன்படுத்தப்படும் கருப்பு மற்றும் வெள்ளை கோடிட்ட கூடாரமான “பைத் அல் ஷார்” போன்று கட்டப்பட்டுள்ளது.

இருக்கை ; 60 ஆயிரம் பேர்

ஆட்டங்கள் ; துவக்க ஆட்டம் உட்பட 6 லீக்,

ஒரு நாக் அவுட், ஒரு காலிறுதி, ஒரு அரையிறுதி

**லுசைல் ஐகானிக் (தோஹா)**

மத்திய தோகாவில் இருந்து வடக்கே 15 கிலோமீட்டர் தொலைவில் உள்ள லுசைல் மைதானம் கத்தாரின் மிகப்பெரிய மைதானம் ஆகும்.

ஆட்டங்கள் ; 6 லீக், ஒரு நாக் அவுட், ஒரு

காலிறுதி, ஒரு அரையிறுதி இறுதிப்போட்டி என அனைத்து வகையான ஆட்டங்களும்

**அகமது பின் அலி (அல் ரய்யான்)**

பாலைவனத்தை சந்திக்கும் இடத்தில் அமைந்துள்ள அழகிய மைதானம் ஆகும்

இருக்கை ; 40 ஆயிரம் பேர் ஆட்டங்கள் ; 6 லீக், ஒரு நாக் அவுட்

**கலீஃபா - தோஹா**

1976-ல் கட்டப்பட்ட இந்த மைதானம் கத்தாருக்கு உலகக்கோப்பையை நடத்தும் உரிமம் கிடைப்பதற்கு முன்பு இருந்த ஒரே மைதானம் இதுதான்.

இருக்கை ; 40 ஆயிரம் பேர் ஆட்டங்கள் ; லீக் சுற்றின் 6 ஆட்டங்கள், ஒரு நாக் அவுட், 3-வது இடத்திற்கான ஆட்டம்

**அல் துமாமா - தோஹா**

மத்திய கிழக்கு நாடுகளில் ஆண்கள் அணியும் பாரம்பரிய தொப்பியான காஃபியா எனப்படும் வடிவத்தில் கட்டப்பட்டுள்ளது.

இருக்கை ; 40 ஆயிரம் பேர் அமரலாம் ஆட்டங்கள் ; லீக் சுற்றின் 6 ஆட்டங்கள், ஒரு நாக் அவுட், ஒரு காலிறுதி

**அல் ஜனூப் - தோஹா**

முத்து மற்றும் மீன்பிடிக்க பயன்படுத்தப்படும் பாரம்பரிய படகு போன்று வடிவமைக்கப் பட்டுள்ளது.

இருக்கை ; 40 ஆயிரம் பேர் அமரலாம் ஆட்டங்கள் ; லீக் சுற்றின் 6 ஆட்டங்கள், ஒரு நாக் அவுட்

**974 - தோஹா**

ஷிப்பிங் கொள்கலன் களால் கட்டப்பட்டுள்ள இந்த மைதானம் உலகக் கோப்பைக்குப் பிறகு முற்றிலும் அகற்றப்படும என அறிவிக்கப்பட்டுள்ளது. 974 என்ற எண் கத்தா ருக்கான சர்வதேச தொலை பேசி குறியீடு மற்றும் அரங்கத்தின் கட்டு மானத்திற்காக பயன்படுத்தப் படும் கொள்கலன்களின் எண்ணிக்கையையும் குறிக்கிறது.

இருக்கை ; 40 ஆயிரம் பேர் ஆட்டங்கள் ; 6 லீக், ஒரு நாக் அவுட்

**எஜூகேசன் சிட்டி**

“பாலைவனத்தின் வைரம்” என்று அழைக்கப்படும் எஜூ கேசன் சிட்டியில் இந்த மைதானம் அமைந்துள்ளது. கால்பந்து திருவிழா முடிவடைந்ததும் மைதானத்தின் இருக்கைகளின் எண்ணிக்கை பாதியாக

குறைக்கப்பட்டு அந்த இருக்கைகள் வளரும் நாடுகளுக்கு நன்கொடையாக வழங்க முடிவு செய்யப்பட்டுள்ளது.

இருக்கை ; 45,350 பேர் அமரலாம் ஆட்டங்கள் ; 6 லீக், ஒரு நாக் அவுட், ஒரு காலிறுதி

**அணிகள் 32**

பிரேசில் - (உலகத்தரவரிசை: 1)

அனைத்து உலகக் கோப்பை போட்டிகளிலும் பங்கேற்ற ஒரே அணி என்ற பெருமையுடன் 6-வது முறையாகக் கோப்பையை வென்று சாதனை படைக்கும் நோக்கத்துடன் கத்தாரில் களமிறங்குகிறது. கால்பந்து என்றால் பிரேசில் என்ற புகழுக்குச் சொந்தக்காரர்கள். ஆசியக் கண்டத்தில் முதல் முறையாக 2002ல் நடைபெற்ற உலகக் கோப்பை போட்டியில் கோப்பையை வென்ற பிறகு ஏற்பட்ட நீண்ட இருபதாண்டு

இடைவெளிக்கு பரிகாரம் தேடுகிறது. மேலும் 2014ல் சொந்த மண்ணில் ஜெர்மனியிடம் அடைந்த தோல்வி மாயாத வடுவாக உள்ளது. பயிற்சியாளர்: அடனோர்லி லியனார்டோ என்ற டிட்டா முக்கிய வீரர்கள்: நெய்மர், வினிஷியஸ் ஜூனியர், காஸமிரோ, டியாகோ சில்வா

**பெண்கள் மீது தனிக்கவனம்**

1.மைதானத்தில் பெண் ரசிகர்கள் மிகவும் கவர்ச்சிகரமான ஆடைகளை அணிவது தடை செய்யப்பட்டுள்ளது. 2.மைதானம் தவிர்த்து கத்தார் நாட்டின் பொதுவெளியில் தங்களுக்கு விருப்பமான ஆடைகளை அணியலாம் எனக் கூறப்பட்டாலும். அருங்காட்சியகங்கள் மற்றும் பிற அரசு கட்டிடங்கள் போன்ற பொது இடங்களுக்குச்செல்லும்போது பார்வையாளர்கள் தங்கள் தோள்கள் மற்றும் முழங்கால்களை

மறைக்க வேண்டும் என அரசு மற்றும் பிபா சாறில் கூறப்பட்டு உள்ளது. 3.குறிப்பிட்ட இருக்கையை பெரிதாக பார்க்கவும், பார்வையாளரைத் தெளிவாகப் பார்க்கவும் எங்களிடம் உயர் தெளிவுத்திறன் கொண்ட சிறப்பு கேமராக்கள் உள்ளன. எனவே நிகழ்வுக்கு பிந்தைய விசாரணை செய்யப்படும் என எச்சரிக்கையும் விடுக்கப்பட்டுள்ளது.

ஈகுவடார்: (உலகத்தரவரிசை: 44)

நான்காவது முறையாக மீண்டும் தகுதி பெற்றுள்ளது. பயிற்சியாளர்: குஸ்தாவோ அல்பாரோ நட்சத்திர வீரர்: ஜெரமி ஸர்மினியோ

நெதர்லாந்து-(உலகத்தரவரிசை:8)

தற்போது 11-வது முறையாகத் உலகக்கோப்பையில் களமிறங்குகிறது பயிற்சியாளர்: லூயிஸ் வான்கெல் நட்சத்திர

வீரர்: விர்ஜின் வான் டிக்

சௌகல்-(உலகத்தரவரிசை:18)

2வது முறையாக களமிறங்குகிறது.பயிற்சியாளர்: அலியோ ஸிஸே முக்கிய வீரர்: இத்ரிஸ்டாகுயே

கத்தார்-(உலகத்தரவரிசை: 50)

போட்டிகளை நடத்தும் நாடு என்ற தகுதியுடன் உலகக்கோப்பையில் முதல் முறையாகக் களமிறங்குகிறது.பயிற்சியாளர்: பெலிக்ஸ் சாஞ்சஸ் முக்கிய வீரர்: அல்மூ ஈஸ் அலி

இங்கிலாந்து-

(உலகத்தரவரிசை: 5)1966ல் சொந்த நாட்டில் நடந்த போட்டியில் கோப்பை வென்ற அணி. அதன் பிறகு சொல்லிக்கொள்ளும்படி சாதனைகள் ஏதும் இல்லை. பயிற்சியாளர்: காரெத் சவுத்கேட் நட்சத்திர வீரர்: ஹாரி கேன்

ஈரான்-உலகத்தரவரிசை: 20

6-வது முறையாக களம் காணுகிறது. பயிற்சியாளர்: கார்லோஸ் க்விரோஸ்நட்சத்திர வீரர்: அலிரஸா ஜகன்பெக்

அமெரிக்கா-(உலகத்தரவரிசை: 16)

21-வது முறையாக உலகக் கோப்பை போட்டிக்கு தகுதிபெறவில்லை.பயிற்சியாளர்: க்ரஹ் பெர்ஹால்டர்நட்சத்திர வீரர்: கிறிஸ்டியன் புலிஸிச்

வேல்ஸ்-(உலகத்தரவரிசை: 19)

64 ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் உலகக் கோப்பைப் போட்டிகளுக்குத் தகுதி பெற்றுள்ளது. பயிற்சியாளர்: ரோப் பேஜ்நட்சத்திர வீரர்: காரெத் பாலே

அர்ஜென்டினா-

(உலகத் தரவரிசை: 3)

18-வது முறையாக உலகக் கோப்பை போட்டிகளுக்குத் தகுதி பெற்றுள்ளது.4 முறை இறுதிப் போட்டிக்கு முன்னேறி, 2 முறை கோப்பை வென்ற அணி (1978,1986) அர்ஜெண்டினா பயிற்சியாளர்: லயனல் ஸ்கலோனி நட்சத்திர வீரர்: லயனல் மெஸ்ஸி

சவூதி அரேபியா- (உலகத்தரவரிசை: 51)

6வது முறையாக உலகக் கோப்பை போட்டிகளுக்குத் தகுதி. பயிற்சியாளர்: ஹெர்வி ரெனார்டுநட்சத்திர வீரர்: சலே அல் ஷெக்ரி

மெக்சிகோ-(உலகத்தரவரிசை: 13)

18-வது முறையாக உலகக் கோப்பையில் களமிறங்குகிறதுபயிற்சியாளர்: ஜெரால்டு மார்ட்டினோநட்சத்திர வீரர்: கில்லர் மோ ஒச்சாவோ

போலந்து-(உலகத்தரவரிசை: 26)

உலகக் கோப்பை போட்டிகளுக்கு 8வது முறையாகத் தகுதி பெற்றுள்ளது. பயிற்சியாளர்: செஸி லாவ் மிக்னிவிக்ஸ்நட்சத்திர வீரர்: ரோபர்ட் லெவன்டோவஸ்கி

பிரான்ஸ்-(உலகத்தரவரிசை: 4)

16 வது முறை நட்சத்திர வீரர்களின் படைவரிசையோடு களமிறங்கும் நடப்புச் சாம்பியன்பயிற்சியாளர்: திதியர் தெஹாம்நட்சத்திர வீரர்: கிலியன் மாப்பே

துனிஷியா-(உலகத்தரவரிசை: 30)

6-வது முறையாக உலகக் கோப்பை போட்டிகளுக்குத் தகுதிபெற்றுள்ளது.பயிற்சியாளர்: ஜலீல் கெத்ரி நட்சத்திர வீரர் : யூசுப் மஸாக்னி

டென்மார்க்-(உலகத்தரவரிசை: 10)

6-வது முறையாக களமிறங்குகிறது பயிற்சியாளர்: கஸ்பர் கல்மெண்ட் நட்சத்திர வீரர்: கிறிஸ்டியன் எரிக்சன்,

ஆஸ்திரேலியா- (உலகத்தரவரிசை: 38)

2006 ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து உலகக் கோப்பைப் போட்டிகளில் பங்கேற்றுவருகிறது. பயிற்சியாளர்: கிரஹாம் அர்னால்டு நட்சத்திர வீரர் : ஜமி மக்லான்

ஸ்பெயின்-(உலகத்தரவரிசை: 7)

2010ல் கோப்பையை வென்ற அணி 16வது முறையாக உலகக்கோப்பை போட்டிகளுக்குத் தகுதி பெற்றுள்ளது.பயிற்சியாளர்: லூயிஸ் என்ட்ரிக்வேநட்சத்திர வீரர் : பெரான் டோரஸ்

ஜெர்மனி- (உலகத்தரவரிசை: 11)

20-வது முறையாக களமிறங்கியுள்ள

ஜெர்மனி, 8 முறை இறுதிப்போட்டிக்குத் தகுதிபெற்றுள்ளது.பயிற்சியாளர்: ஹான்ஸி பிளிக்முக்கிய வீரர்: ஜெர்ஜி நாப்ரி

ஜப்பான் - (உலகத்தரவரிசை: 24)

1998 முதல் தொடர்ச்சியாக உலகக் கோப்பை போட்டிகளில் பங்கேற்றுவருகிறது. பயிற்சியாளர்: ஹாஜியோ மொரியஸ்முக்கிய வீரர்: தகுமி மினாமினோ

கோஸ்டாரிகா - (உலகத்தரவரிசை:31)

உலகக் கோப்பை போட்டிகளுக்கு இது ஐந்தாவது முறை.பயிற்சியாளர்: லூயிஸ் பெர்னாண்டோ ஸுவாரஸ்முக்கிய வீரர்: ஸெல்கோ பெர்ஜஸ்

பெல்ஜியம்-(உலகத்தரவரிசை: 2)

14வது முறையாக உலகக்

கோப்பை போட்டிகளுக்குத் தகுதி பெற்றுள்ளது.பயிற்சியாளர்: ரோபர்டோ மார்ட்டினஸ்முக்கிய வீரர்:ரொமேலு லூக்காகு

கனடா- (உலகத்தரவரிசை:41)

36 ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் உலகக் கோப்பை போட்டிகளில் பங்கேற்பு.பயிற்சியாளர்: ஜான் ஹெர்ட்மான்முக்கிய வீரர்: அல்போன்ஸா டேவிஸ்

மொராக்கோ-(உலகத்தரவரிசை: 22)

உலகக்கோப்பைக்கு இது ஆறாவது முறை.பயிற்சியாளர்: வாலித் ரெக்ராய்யூ முக்கிய வீரர்: அயூப் எல் கேபி

குரோஷியா-(உலகத்தரவரிசை: 12)

6-முறையாக இறுதிப் போட்டிக்கு தகுதி பெற்றுள்ள குரோஷியா கடந்த சீசனில்

பிரான்சிடம் தோற்று இரண்டாமிடம் பிடித்தது. பயிற்சியாளர்: ஸ்டாட்கோ டாலிச்முக்கிய வீரர்: மரியோ பஸாலிச்

செர்பியா - (உலகத்தரவரிசை:21)

இரண்டாவது முறையாகத் தகுதி பெற்றுள்ளது.பயிற்சியாளர்: டிராகன் ஸ்ட்ரொக்கோவிச் முக்கிய வீரர்: துஸான் டாடிச்

சுவிட்சர்லாந்து- (உலகத்தர வரிசை:15)

12வது முறையாக உலகக் கோப்பை போட்டிகளில் பங்கேற்கிறது. போராட்டக்குணம் மிக்க அணி என்ற பெயர் பெற்றது. பயிற்சியாளர்: முராத் யாகின்முக்கிய வீரர்: ஷெர்தான் ஷக்கிரி

தென்கொரியா - (உலகத்தர வரிசை:28)

11வது முறையாகத் தகுதி பெற்றுள்ளது. பயிற்சியாளர்: பல்லோ பென்டோ முக்கிய

வீரர்:ஸன் ஹூங் மின்

கானா - (உலகத்தரவரிசை:61)

4வது முறையாக உலகக் கோப்பை போட்டிகளில் பங்கேற்கிறதுபயிற்சியாளர்: ஒட்டுஅடூ.முக்கிய வீரர்: ஆன்ட்ரே அயூ

கேமரூன் -(உலகத்தரவரிசை:43)

ஆப்பிரிக்க சிங்கம் என்ற பெருமை கொண்ட கேமரூன் 8-வது முறையாகப் பங்கேற்கிறது.பயிற்சியாளர்: ரிகோபர்ட் ஸாங்முக்கிய வீரர்: ஆந்த்ரே ஒனானே

போர்ச்சுக்கல் - (உலகத்தரவரிசை:9)

8வது முறையாக தகுதி பெற்றுள்ள போர்ச்சுக்கல் உலகக்கோப்பையில் தகுதி சுற்றுப் போட்டிகளில் பிளே ஆஃப் வந்துள்ளது. பயிற்சியாளர்: பெர்னாண்டோ

சான்ட்ரோஸ்முக்கிய வீரர்: கிறிஸ்டியானோ ரொனால்டோ

உருகுவே - (உலகத்தரவரிசை: 14)

முதல் உலகக் கோப்பையை முத்தமிட்ட அணி. 2 முறை உலகச் சாம்பியன். 1950க்குப் பிறகு சொல்லிக் கொள்ளும் பெருமைகள் இல்லை. 14வது முறையாகக் களம் காண்கிறது.பயிற்சியாளர்: தியாகோ அலென்ஸோ முக்கிய வீரர்: சுவாரஸ், எடின்சன் கவானி

# 2. நவம்பர் 21, 2022




…

விளையாட்டு உலகில் முதன்மையான திருவிழாவான உலகக்கோப்பை கால்பந்து

தொடரின் 22-வது சீசன் அரபு நாடான கத்தாரில் நடைபெற்று வருகிறது.

இன்றைய ஆட்டங்கள்

இங்கிலாந்தை சமாளிக்குமா ஈரான்?

உலகக்கோபைபை கால்பந்து தொடரின் 2-வது லீக் ஆட்டத்தில் பலமான இங்கிலாந்து அணியை ஆசிய அணியான ஈரான் எதிர்கொள்கிறது. அனைத்து வரிசையிலும் சிறந்த ஆட்டக்காரர்களைக் கொண்ட அணியாக இங்கிலாந்து களமிறங்குகிறது. உலகக்கோப்பை தகுதி சுற்று தகுதிச்சுற்று போட்டிகளில் 8 ஆட்டங்களில் மொத்தம் 37 கோல்கள் அடித்து 2-வது இடம் பிடித்த இங்கிலாந்து அணியின் செயல்பாடுகள் பேசும் அளவிற்கு சிறப்பானதாக இல்லை. இருப்பினும் மின்னல் வேக தாக்குதல் பாணி ஆட்டம் இங்கிலாந்து அணிக்கு

கைகொடுக்கும் என்ற நம்பிக்கையில் உள்ளார் பயிற்சியார் காரெத் சவுத்கேட். கோலடிக்க மாட்டோம், கோல் போட விடமாட்டோம் என்ற வகையில் செயல்படும் ஈரான் அணி தகுதிச் சுற்று போட்டிகளின் 10 ஆட்டங்களில் 8-இல் வெற்றி பெற்று குழுச்சாம்பியனாக உலகக்கோப்பையில் பங்கேற்கிறது. மெஹ்தி தரேமி, அல்ரெஸா ஜஹன்பக்ஷ் ஆகிய முன்கள வீரர்களுடன் மஜித் ஹுசைனி தலைமையிலான தடுப்பு ஆட்டக்காரர்கள் இணைந்து இங்கிலாந்துக்கு சவாலாக இருப்பார்கள் என எதிர்பார்க்கலாம்.

இங்கிலாந்து - ஈரான் (2வது லீக்) நேரம் : மாலை 6:30 மணி இடம் : கலீபா மைதானம்

# 3. 2002ஆம் ஆண்டின் வரலாற்றை மீண்டும் உருவாக்குமா செனகல்

2002-ஆம் ஆண்டு உலகக்கோப்பையில் பிரான்ஸ் அணிக்கு அதிர்ச்சி வைத்தியம் அளித்த செனகல் அணி தனது முதல் லீக் ஆட்டத்தில் பலமான நெதர்லாந்து அணியை எதிர்த்து களமிறங்குகிறது. உலகக்கோப்பை போட்டிகளில் பலமுறை மிகச் சிறப்பாக விளையாடி மூன்று முறை இறுதிப் போட்டிகளில் கண்ணீரோடு கோப்பையை நழுவவிட்ட நெதர்லாந்து அணி, நடப்பு சீசனில் எதிர்ப்பு ஆட்டக்காரர் விரிஜின் வான்டிக் தலைமையிலான மிகவும் பலமாக களமிறங்குகிறது. 2002-ஆம்

ஆண்டு உலகக்கோப்பை கால்பந்து உலகில் சுனாமியை உருவாக்கிய ஆப்பிரிக்க அணியான செனகல் அணி பிரான்ஸ், உருகுவே ஆகிய அணிகளை வீழ்த்தி காலிறுதி வரை முன்னேறி அசத்தியது. நடப்பு சீசனில் 2002-ஆம் ஆண்டு மாதிரி சுனாமி எதுவும் உருவாகலாம் என எதிர்பார்க்கப்பட்ட நிலையில், செனகல் அணியின் நம்பிக்கை நட்சத்திரமான ஸாடியோ மானே காயம் காரணமாக விளையாட இயலாமல் போனது அந்த அணிக்கு சிக்கலை உருவாகியுள்ளது.

செனகல் - நெதர்லாந்து (3-வது லீக்) நேரம் : இரவு 9:30 மணி இடம் : அல் துமாமா

# 4. 64 ஆண்டுகளுக்குப் பின் அசத்துமா வேல்ஸ்




...

64 ஆண்டுகள் காத்திருப்பிற்குப் பிறகு உலகக்கோப்பைப் போட்டிகளுக்குத் தகுதிபெற்றுள்ள வேல்ஸ் அணி தனது முதல் லீக் சுற்று ஆட்டத்தில் பலமான அமெரிக்காவை எதிர்கொள்கிறது. கடைசியாக 1958-ஆம் ஆண்டு உலகக்கோப்பை போட்டியில் விளையாடிய வேல்ஸ் அணி அந்த சீசனில் காலிறுதிக்கு முன்னேறியிருந்தது. அதன்பின் 64 ஆண்டுகள் உலகக்கோப்பை கால்பந்து பக்கம் எட்டி கூட பார்க்கவில்லை. நடப்பு சீசனில் காரெத் பாலே, ஆரோன் நம்ஸி, டேனியல் ஜேம்ஸ், நிக்கோ வில்லியம்ஸ், பென் டேவிஸ் போன்ற அபாயகரமான வீரர்கள் இருப்பதால் காலிறுதிக்கு முந்தைய சுற்றுக்கு எளிதாக முன்னேறும் நம்பிக்கையுடன் இருக்கிறது. வட அமெரிக்கக் கண்டத்தின் தகுதிச்சுற்று ஆட்டங்களில் 3-வது இடத்தைப் பிடித்து அமெரிக்கா இந்த

உலகக்கோப்பை போட்டிகளில் கிறிஸ்டியன் பூலிஸச், வெஸ்டன் மக்கெனி, ப்ரண்டன் ஆரோன்ஸன், ஜெர்ஜியோ டெஸ்ட் ஆகிய இளம்படையினருடன் பங்கேற்கிறது. முதல் உலகக் கோப்பை போட்டியில் மூன்றாவது இடம் பெற்றது மட்டுமே இதுவரை அமெரிக்காவின் சாதனையாக உள்ளது. தகுதிச் சுற்று ஆட்டங்களில் 7 வெற்றி, 3 தோல்வி, 4 சமநிலை பெற்றிருந்தது.

அமெரிக்கா - வேல்ஸ் (4-வது லீக்) நேரம் : நள்ளிரவு 12:30 மணி (திங்களன்று அதிகாலை) இடம் : அல் ரய்யான்

# 5. நவம்பர் 22, 2022

விளையாட்டு உலகில் முதன்மையான திருவிழாவான உலகக்கோப்பை கால்பந்து தொடரின் 22-வது சீசன் அரபு நாடான கத்தாரில் நடைபெற்று வருகிறது.

நவம்பர் 20 முதல் டிசம்பர் 18 வரை

**இன்றைய ஆட்டங்கள்**

அர்ஜெண்டினா - சவூதி அரேபியா நேரம் : மதியம் 3:30 மணி இடம் : லுசைல் மைதானம்

**குரூப் “சி”**

அசுர பலத்தில் உள்ள அர்ஜெண்டினா அணியை கத்துக்குட்டி சவூதி அரேபியா அணி சமாளிப்பது மிகவும் கடினம் என்பதால் அர்ஜெண்டினா அணி இந்த ஆட்டத்தில்

எளிதாக வெல்லும் என எதிர்பார்க்கப்படுகிறது. தடுப்பாட்டத்திற்கு பெயர் பெற்ற சவூதி அரேபியா போட்டியை டிரா செய்யவும் வாய்ப்புண்டு.

டென்மார்க் - துனிசியா நேரம் : மாலை 6:30 மணி இடம் : எஜூகேசன் சிட்டி மைதானம்

**குரூப் “டி”**

அனுபவத்தில் சிறந்த டென்மார்க் அணி சற்று சூப்பர் பார்மில் உள்ளது. இது அந்த அணிக்கு கூடுதல் சாதகத்தை ஏற்படுத்தும். அனைத்து பிரிவு களிலும் சிறப்பாக விளையாடக்கூடிய துனிசி யா அணியின் உறுதியான பார்ம் கணிக்க முடியாதது என்றாலும் போட்டியை கடைசி நேரத்தில் மாற்றுவதில் வல்லமை படைத்த வை என்பதால் இந்த ஆட்டத்தில் யாருக்கு வெற்றி என திடமாகக் கூறமுடியாது.

மெக்ஸிகோ - போலந்து நேரம் : இரவு 9:30 மணி

இடம் : 974 மைதானம்

**குரூப் “சி”**

தடுப்பாட்டத்தில் உலக புகழ் வாய்ந்த மெக்ஸிகோ அணி ஒரு கோல் அடித்துவிட்டால் பந்தை தனது காலுக்குள் கட்டி போடும் அளவிற்கு சிறப்புடை யது. அனைத்து பிரிவுகளிலும் சிறப்பான ஆட்டத்தை வெளிப்படுத்தும் அணியாக போலந்து இருந்தாலும், மெக்ஸிகோவை கவனமாக சமாளி த்தால் மட்டுமே வெற்றி பெறலாம். சற்று அசந்தால் மெக்ஸிகோவின் போட்டியை முற்றிலும் மாற்றி விடும். பலத்தில் இரு அணிகளும் சரிசமமாக இருப்ப தால் இந்த ஆட்டம் டிரா ஆகலாம்.

பிரான்ஸ் - ஆஸ்திரேலியா நேரம் : நள்ளிரவு 12:30 மணி (செவ்வாயன்று அதிகாலை) இடம் : அல் ஜனுப் மைதானம்

## குரூப் “டி”

நடப்பு சாம்பியனான பிரான்ஸ் அணி கடந்த சீசனைக் காட்டிலும், 22-வது சீசனில் மிரட்டல் பலத்துடன் களமிறங்குகிறது.  அதிரடி தாக்குதல் வகை ஆட்டத்தை கையா ளும் சிறப்புடைய பிரான்ஸ் அணியை, தடுப்பாட்ட பலத்தை மட்டும் கொண்டுள்ள ஆஸ்திரேலிய அணி சமாளிப்பது சிரமம் ஆகும்.  இந்த ஆட்டத்தில் பிரான்ஸ் அணி எளிதாக வெல்ல வாய்ப்புள்ளது.

சேனல் : ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா (ஓடிடி) இலவசமாக காணலாம்.

விதிகளை மீறி பெண்களை கண்காணிக்கும் கத்தார்...

உலக தொடரை நடத்தினாலும் கத்தார் நாட்டிற்கு சென்றுள்ள வெளிநாட்டு கால்பந்து பெண் ரசிகர்களுக்கு அந்நாட்டு அரசு

இறையாண்மை தொடர்பாக எவ்வித சமரசம் செய்யவில்லை. உடை மற்றும் திருமணமாகாத பெண்கள் பாலியல் உறவு, ஓரினச்சேர்க்கை என பல முக்கியமான விஷயங்களில் தடை உத்தரவு பிறப்பித்துள்ளது. இந்த தடை உத்தரவை வெளிநாட்டு பெண்கள் பின்பற்றுகிறார்களா? என்பதை அறிய கால்பந்து மைதானத்தில் அமர்ந்துள்ள பெண்களின் இருக்கையை பெரிதாக பார்க்கவும், பார்வையாளரைத் தெளிவாகப் பார்க்கவும் உயர் தெளிவுத்திறன் கொண்ட சிறப்பு கேமராக்களை வைத்து தனி மனித மீறலை மீறியிருக்கிறது கத்தார் அரசு.

# 6. மெஸ்ஸியின் ரசிகர்களால் மூச்சுத் திணறும் கத்தார்

தற்போதைய நவீன கால்பந்து உலகில் சொந்த நாட்டு ரசிகர்களை விட வேறு நாட்டு ரசிகர்களை அதிகம் கொண்ட பெருமை அர்ஜெண்டினா கால்பந்து அணியின் கேப்டனும், கால்பந்து உலகின் நட்சத்திர வீரருமான மெஸ்ஸி தான். தற்போதைய 22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து தொடர் நடைபெறும் கத்தார் நாட்டில் குவிந்துள்ள உலக நாடுகளின் ரசிகர்கள் அர்ஜெண்டினா நாட்டின் ஜெர்சியை அணிந்து ஊர் சுற்றி வருகிறார்கள். இதனால் அர்ஜெண்டினா அணி தங்கியிருக்கும் பகுதி, பயிற்சி பெறும் பகுதி, அந்த அணி விளையாடும் மைதானத்தின் பகுதிகளில் பலத்த சர்வதேச பாதுகாப்பு வளையம்

அமைக்கப்பட்டுள்ளது. இது மெஸ்ஸிக்கு கடைசி உலகக்கோப்பை என்பதால் கோப்பையுடன் அவரை ஓய்வு பெற வைக்கவேண்டும் என்ற எண்ணத்தில் கடன் வாங்கி கத்தார் வந்துள்ளனர் அவரது உலக ரசிகர்கள்.

கோப்பை வெல்லும் அணிகளில் ஒன்றாக கருதப்படும் கால்பந்து உலகின் நட்சத்திர அணியான அர்ஜெண்டினா அணி தனது முதல் லீக் ஆட்டத்தில் ஆசிய அணியான சவூதி அரேபியாவை எதிர்கொள்கிறது. கத்தார் நாட்டின் 2-ஆம் மிகப்பெரிய நகரான லுசைல் நகரத்தில் உள்ள ஐகானிக் மைதானத்தில் நடைபெறும் இந்த ஆட்டத்தை காண திங்களன்று முதலே ரசிகர்கள் குவிந்தனர். அர்ஜெண்டினா நாட்டிற்கு சொந்த நாட்டு ரசிகர்களை விட உலகம் முழுவதும் உள்ள வேறு நாட்டு ரசிகர்கள் அதிகம். மேலும் ரசிகர்கள் அர்ஜெண்டினா ஜெர்சியான வெளிர் நிற ஊதா

(ஸ்கை புளூ) ஜெர்சியை ஒரு உடையாக அணிந்து வருவதால் லுசைல் நகரமே வானத்தின் பிரிகை போன்று காட்சி அளிக்கிறது.

# 7. நேரடி ஒளிபரப்பு... முதல் நாளே சொதப்பிய ஜியோ...

கத்தாரில் நடைபெற்று வரும் 22-வது சீசன் உலகக்கோப்பை தொடரை இந்தியாவில் ஸ்போர்ட்ஸ் 18 சேனலிலும், ஜியோ சினிமா ஓடிடியிலும் நேரடியாக காண முடியும். தொடக்க நிகழ்வு மற்றும் முதல் போட்டி ஒளிபரப்பு ஜியோ சினிமா ஓடிடியில் சரியாக, நேரடியாக ஒளிபரப்பாகவில்லை. இதனால் சமூகவலைத்தளங்களில் ரசிகர்கள், கால்பந்து ஆட்டத்தை சரிவர பார்க்க முடியவில்லை எனப் புகார் தெரிவித்தார்கள். ஆட்டத்தின் ஒளிபரப்பு அவ்வப்போது அப்படியே நின்றுவிடுவதாலும் பலமுறை ஒளிபரப்பில் தடங்கல் ஏற்படுவதாலும் தங்களுடைய

நிலையைச் சமூகவலைத்தளங்களில் வெளிப்படுத்தினார்கள். சில ரசிகர்கள் புகாரும் (டுவிட் டேக்) அளித்தனர்.

கட்டணம் ஏதும் கிடையாது ஜியோ ஜியோ சினிமாவிற்கு எவ்வித சந்தா கட்டணமும் இல்லை. ஸ்மார்ட் போன் மற்றும் ஸ்மார்ட் டிவிகளில் இலவசமாக காணலாம்.

செயலியை புதுப்பித்துக் கொள்ள உத்தரவு

புகாருக்கு டுவிட்டரில் பதில் அளித்த ஜியோ சினிமா நிறுவனம்,”ரசிகர்களே, உங்களுக்கு நல்ல அனுபவத்தைத் தருவதற்காகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறோம். உங்களுடைய ஜியோ சினிமா செயலியை புதுப்பித்துக் கொள்ளுங்கள். சிரமத்துக்கு வருந்துகிறோம்.நாங்கள் இந்தப் பிரச்சனையைக் கவனித்துக் கொண்டிருக்கிறோம். பிரச்சனை என்றால் எங்களுக்கு நீங்கள்

மின்னஞ்சல் அனுப்பலாம். நாங்கள் உதவுவோம் என்று அம்பானியின் ஜியோ தெரிவித்தது.

# 8. நவம்பர் 23, 2022

விளையாட்டு உலகில் முதன்மையான திருவிழாவான உலகக்கோப்பை கால்பந்து தொடரின் 22-வது சீசன் அரபு நாடான கத்தாரில் நடைபெற்று வருகிறது.

## இன்றைய ஆட்டங்கள்

முன்களத்தில் போதிய அனுபவம் இல்லாமல் இருக்கும் மொராக்கோ அணி தடுப்பாட்டத்தை நம்பி மட்டுமே களமிறங்குகிறது. இது ஒருபக்கம் மைனஸ் என்றால் அனைத்து பிரிவுகளிலும் பலமாக உள்ள குரோஷியாவை மொராக்கோ சமாளிப்பது மிகவும் சிரமமான விஷயம். இந்த ஆட்டத்தில் குரோஷியா எளிதாக வெல்லும்.

## மொராக்கோ - குரோஷியா



மொராக்கோ - குரோஷியா





ஸ்பெயின் - கோஸ்டாரிகா



...

நேரம்: மதியம் 3:30 மணி; இடம்: அல் பாய்த்

இரு அணிகளை ஒப்பிடுகையில் ஜெர்மனி அணி சற்று பலத்துடன் இருப்பதால் அந்த அணி வெற்றி பெற கூடுதல் சாதகம் உள்ளது. எந்த நேரத்தில் எப்படி விளையாடும் என கணிக்க முடியாத ஜப்பான் அணியிடம் ஜெர்மனி சற்று கவனமாக விளையாடுவது நல்லது. முதல் கோலடித்துவிட்டால் ஜப்பான் அணியிடம் பந்தை பறிப்பது கடினம்.

## ஜெர்மனி - ஜப்பான்

நேரம்: மாலை 6:30 மணி; இடம்: கலீபா

அனுபவ அணியான ஸ்பெயின் கடந்த கால தோல்வி களில் பாடம் கற்று நடப்பு சீசனில் அதிரடி வீரர்களு டன் களமிறங்குவதால் இந்த ஆட்டத்தில் எளிதாக வெற்றி பெறும் என எதிர்பார்க்கப்படுகிறது. ஸ்பெயினுடன் ஒப்பிடுகை

யில் கோஸ்டாரிகா பலத்தில் குறைந்த நிலையில் உள்ளது. தடுப்பாட்டத்தில் கோஸ்டாரிகா ஏதேனும் மாயாஜாலம் காட்டினால் ஆட்டம் டிராவில் முடிவடையலாம்.

**ஸ்பெயின் - கோஸ்டாரிகா**

நேரம்: இரவு 9:30 மணி; இடம்: அல் துமமா

அனுபவ வீரர்கள் அதிகம் உள்ளதால் இந்த ஆட்டத்தில் பெல்ஜியம் எளிதாக வெல்லும் என எதிர்பார்க்கப்படுகிறது. கனடா கடந்த காலங்களை விட நடப்பு சீசனில் சற்று மாறுபட்ட வீரர்களுடன் களமிறங்குவதால் வெற்றிக்காக போராடும். ஆட்டம் டிராவை நோக்கி பயணித்தாலும் ஆச்சர்யப்படுவதற்கு ஒன்றுமில்லை.

**பெல்ஜியம் - கனடா**

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (புதனன்று

அதிகாலை); இடம் : அல் ரய்யான்

சேனல் : ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா (ஓடிடி) இலவசமாக காணலாம்.

**சீரானது ஜியோ...**

22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து போட்டியை ஓடிடியில் நேரடியாக ஒளிபரப்பு செய்யும் உரிமையை அம்பானியின் ஜியோ சினிமா (JIO CINEMA) பெற்றுள்ளது. தொடக்க போட்டி உட்பட முதல் இரண்டு நாட்கள் சாட்டிலைட் பிரச்சனை காரணமாக நேரடி ஒளிபரப்பில் அடிக்கடி தொய்வு ஏற்பட்டது. ஸ்மார்ட்போன், ஸ்மார்ட்டிவிகளில் நேரடியாக பார்க்கும் விளையாட்டு ரசிகர்கள் டுவிட்டரில் நேரடியாக புகார் அளித்தனர். இந் நிலையில், செவ்வாயன்று நள்ளிரவுமுதல் ஜியோ சினிமா தடங்கலின்றி போட்டியை ஒளிபரப்பு செய்தது.

**சூதாட்டமா?**

முதல் ஆட்டத்தில் கத்தார் நாடு வெற்றி பெற ஈகுவடார் நாட்டிற்கு லஞ்சம் கொடுக்கப்பட்டதாக செய்தி ஒன்றும் சர்வதேச அளவில் உலாவி வருகிறது. ஆனால் இது பற்றி பிபா கண்டுகொள்ளவில்லை. மேலும் ஆட்டத்தின் போக்கை பற்றி தான் சூதாட்டம் பற்றி கணிக்க இயலும். ஆட்டத்தின் போக்கை உற்றுநோக்கினால் ஈகுவடார் அணி மிக கடுமையாக போராடியது. சூதாட்டத்தை கணிக்கும் அளவிற்கு விளையாட்டுப் போட்டியை ஆராயாமல் சாதாரண சமூக வலைதள கருத்துக்களை செய்திகளாக வெளியிடுவது தான் வேதனையான விசயமாக உள்ளது.

# 9. கத்துக்குட்டி சவூதியிடம் மண்ணை கவ்வியது...

கோப்பை வெல்லும் அணிகளில் ஒன்றாக கருதப் படும் அர்ஜெண்டினா அணி தனது முதல் ஆட்டத்தில் ஆசிய அணியான சவூதி அரேபியாவை எதிர்கொண்டது. தொடக்கம் முதலே பரபரப்பாக நடைபெற்ற இந்த ஆட்டத்தில் சவூதி அரேபியா 2-1 என்ற கணக்கில் அர்ஜெண்டினாவை வீழ்த்தி கால்பந்து உலகிற்கு அதிர்ச்சி வைத்தியம் அளித்துள் ளது. இந்த ஆட்டத்தில் இரு அணி வீரர்களும் ஆக்ரோஷமான ஆட்டத்தை வெளிப்படுத்தியதால் நிறைய வீரர்களுக்கு காயம் ஏற்பட்டது. முக்கியமாக அர்ஜெண்டினாவின் அதிரடி தடுப் பாட்டத்தால் சவூதியின் முன்கள வீரர்கள் பெரும்பாலானோர் காயமடைந்தனர்.

# 10. படையெடுக்கும் மஞ்சள் ரசிகர்கள்...

அர்ஜெண்டினா போல கால்பந்து உலகில் பிரேசிலுக்கும் அதிக ரசி கர்கள் உள்ளனர். மற்ற நாட்டு ரசிகர்களை போல பிரேசில் ரசிகர்கள் தொடக்கத்திலேயே கத்தார் வரவில்லை. காரணம் பிரேசில் அணிக்கு முதல் ஆட்டம் 25-ஆம் தேதி என்பதால் கடந்த 2 நாட்களாக தான் கத்தார் வந்து கொண்டி ருக்கின்றனர். இதனால் தொடக்க நாளில் கத்தாரில் மஞ்சள் நிறம் குறை வாகவே பிரதிபலித்தது. இந்நிலையில், பிரேசில் அணியின் முதல் ஆட்டம் தொடங்க இன்னும் ஒரே ஒரு நாள் உள்ள நிலையில், போட்டி நடக்கும் லுசைல் நகரத்தில் எங்கு பார்த்தாலும் மஞ்சள் நிறம் மயக்கி வருகிறது. பிரேசில் அணி தனது லீக் ஆட்டத்தில்

# 11. நட்சத்திர வீரர்களை குறிவைத்து காயத்தை ஏற்படுத்தும் எதிரணிகள்

கால்பந்து விளையாட்டில் எல்லாம் மாறிவிட்டது. முன்னர் பந்தை கடத்துவது, புத்திசாலியுடன் எதிரணி வீரர்களிடம் பந்தை பறிப்பது, கோலடிக்கக் கூடாது என்பதற்காக பந்தை திசை திருப்புவது என பல்வேறு செயல்பாடுகள் ஒழுக்கமான அளவில் இருந்தன. சின்னஞ்சிறு மோதல்கள், காயங்கள் இருந்தாலும் பெரியளவு தாக்குதல் இல்லாமல் இருந்தது. ஆனால் கடந்த 10 ஆண்டுகளாக தாக்குதல் பாணி மாறிவிட்டது. நட்சத்திர வீரரை தாக்கினால் அந்த அணி கோல டிக்க முடியாது என்ற எண்ணத்துடன்

எதிரணி தடுப்பாட்ட வீரர்கள் தாக்குதலில் ஈடுபடுகின்றனர். ரஷ்யாவில் நடைபெற்ற 21-வது உலகக்கோப்பையில் தனி வீரர்கள் மீதான தாக்குதல் முறை 50% ஆக அதிகரித்து இருந்த நிலையில், நடப்பு சீசனில் தொடக்கத்திலேயே 100% தனி நபர் தாக்குதல் முறை உள்ளது. திங்களன்று நடைபெற்ற இங்கி லாந்து - ஈரான் ஆட்டத்தில், இங்கிலாந்து கேப்டன் ஹாரி மீது பலமுறை குறிவைக்கப்பட்டது. ஆனால் ஆட்டத்தின் நடுபாதி யில் ஹாரி காயமடைந்தார். சுருண்டு விழுந்தார். சிறிது நேர ஓய்வுக்கு பின்னர் களமிறங்கினார்.

# 13. இன்றைய ஆட்டங்கள்

இன்று “ஸ்டார் டே”

உலகக்கோப்பை தொடரில் வியாழனன்று 4 லீக் ஆட்டங்கள் நடைபெறுகிறது. இதில் 3 ஆட்டங்களில் கால்பந்து உலகின் நட்சத்திர அணிகளான பிரேசில், போர்ச்சுக்கல், உருகுவே ஆகிய அணிகள் பங்கேற்கிறது.

**குரூப் “ஜி”**

சுவிட்சர்லாந்து - கேமரூன்

நேரம்: மதியம் 3:30 மணி; இடம்: அல் ஜனுவப்

**குரூப் “ஹெஜ்”**

உருகுவே - தென் கொரியா

நேரம்: மாலை 6:30 மணி; இடம்: எஜூகேசன்

சிட்டி

**குரூப் “ஹெஜ்”**

போர்ச்சுக்கல் - கானா

நேரம்: இரவு 9:30 மணி; இடம்: 974 மைதானம்

**குரூப் “ஜி”**

பிரேசில் - செர்பியா

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (வெள்ளியன்று அதிகாலை); இடம் : லுசைல்

**“பீப்பி”க்கு கட்டுப்பாடு விதிக்காத கத்தார்**

உலக தொடரை நடத்தும் கத்தார் பல்வேறு கட்டுப்பாடுகளை விதித்துள்ளது. ஆடைக்கட்டுப்பாடு, மதுபானம், ஓரினசேர்க்கை உள்ளிட்ட கட்டுப்பாடுகளை விதித்திருந்தாலும் ஒன்றை மட்டும் மறந்துவிட்டது. ஆப்பிரிக்கா

மற்றும் வடஅமெரிக்க கண்டத்தில் வந்துள்ள ரசிகர்கள் வாகனங்களின் ஹார்ன் வகை பீப்பிகளை வைத்து மைதானத்தை நடுங்க வைத்து வருகின்றனர்.குறிப்பாக ஆப்பிரிக்கர்கள் கொண்டு வரும் பீப்பிகள் அதிக டெசிபல் கொண்டது ஆகும். இதனால் மைதானத்தில் அமைதியின்மை, வயதானவர்கள் பதற்றம் அடைதல், நடுவர்களின் விசில் சத்தத்தை கவனிக்கும் திறன் உள்ளிட்ட பல பிரச்சனைகள் உருவாகின்றன. இதனால் பிற தடைகளை விட “பீப்பி”க்கு தடைக்கு விதிப்பது மிக முக்கியமானதாக உள்ளது என பார்வையாளர்கள் கருதுகின்றனர்.

சேனல் : ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா (ஓடிடி) இலவசமாக காணலாம்.

**பிட்ச் சரியில்லை... வீரர்களுக்கு மோசமான**

**அளவில் ஏற்படும் காயம்....**

பாலைவன பூமியான கத்தாரில் பசுமை என்ற வார்த்தைக்கு அர்த்தம் கிடையாது. அங்கு வெயில் மிகவும் அதிகம். கிட்டத்தட்ட 45 டிகிரி வெயில் புரட்டியெடுக்கும் என்பதால் மரங்கள் கூட வளருவது சிரமமான விஷயம்தான். இத்தகைய சூழ்நிலையில் பிரம்மாண்ட செலவுடன் 8 மைதானங்களில் தற்காலிமாக புல்தரை மைதானங்கள் அமைக்கப்பட்டது. பொதுவாக கிரிக்கெட் விளையாட்டைப் போன்று கால்பந்து மைதானத்திற்கு பிட்ச் அனுபவம் வேண்டும். ஆனால் போதியளவு அனுபவம் மற்றும் ஆட்டங்கள் இல்லாமல் ஆடுகளம் அமைக்கப்பட்டதால் பிட்ச் பகுதி கடுமையாக வழுக்கிறது. இதனால் வீரர்களுக்கு காயம் அதிகம் ஏற்படுகிறது.

# 14. அர்ஜெண்டினா அணியின் தோல்விக்கான காரணம்?

36 ஆண்டுகளுக்கு முன் உலகக்கோப்பை வென்ற ஏக்கத்தில் இருக்கும் அர்ஜெண்டினா அணி நடப்பு சீசனில் கோப்பை வெல்லும் அளவிற்கு வலுவாக களமிறங்கியுள்ளது. கோபா வெற்றி, 22-வது சீசன் உலகக்கோப்பைக்கான தகுதி சுற்றில் தோல்வியை சந்திக்காமல் (17 ஆட்டம் - 11 வெற்றி, 6 டிரா) கத்தாருக்கு வந்தது போன்ற நிகழ்வுகள் அர்ஜெண்டினா அணிக்கு கண்டிப்பாக கோப்பையை வெல்லும் அளவிற்கு கூடுதல் சாதகத்தை ஏற்படுத்தும் என தொடக்கம் முதலே கணிக்கப்பட்டது. மேலும் கால்பந்து உலகின் நட்சத்திர வீரரும், அர்ஜெண்டினாவின் கேப்டனுமான மெஸ்ஸிக்கு

இது கடைசி உலகக்கோப்பை என்பதால் அவரது ரசிகர்கள் கோப்பையை மெஸ்ஸி கையில் கொடுக்க வேண்டும் என்றும், அதற்கு நமது ஆதரவு வேண்டும் என உலக மெஸ்ஸி மற்றும் அர்ஜெண்டினா ரசிகர்கள் கத்தாரில் கடன் வாங்கிய பணத்துடன் குவிந்துள்ளனர். இவ்வளவு கிளைமேக்ஸ் உள்ள நிலையில், முதல் லீக் ஆட்டத்தில் 2-1 என்ற கோல் கணக்கில் அர்ஜெண்டினாவை புரட்டியெடுத்தது சவூதி அரேபியா. சவூதி அரேபியாவின் இந்த பிரம்மாண்ட வெற்றி அர்ஜெண்டினாவிற்கு மட்டுமல்ல கால்பந்து உலகிற்கே அதிர்ச்சி சம்பவமாக உள்ளது. காரணம் கால்பந்து உலகில் பெரியளவு வரலாறு எதுவும் இல்லாத சவூதியிடம் உலகின் உன்னதமான வரலாறு கொண்ட அர்ஜெண்டினாவை வீழ்த்தியது சாதாரண விசயம் கிடையாது.

## அலட்சியம் தான் தோல்விக்கு காரணம்

கடந்த கால வரலாறுகளின் படி சவூதியை அசால்ட்டாக நினைத்தது n சவூதியில் இருந்த வீரர்களில் இருவரை தவிர மற்ற அனைவரும் மிக இளம் வீரர்கள் என்பதை உணராதது முதல் கோல் போட்டவுடன் வெற்றி பெற்றுவிட்டோம் என செருக்காக விளையாடியது n தொடக்க ஆட்டத்திலேயே சுறுசுறுப்பு இல்லாமல் மந்தமாக அதாவது வேகமாக ஓடாமல் நடைப்பயிற்சி போல் நகர்ந்தது கோலடிக்கும் மனநிலையை கையெடுக்காமல் தேவையில்லாமல் சவூதி வீரர்களிடம் தடுப்பாட்ட தாக்குதல் பாணியை தொடுத்தது களத்தில் பம்பரமாக சுழன்ற சவூதியின் கோல் கீப்பர் அல் ஓவைசிடம் வியூகத்தை ஏற்படுத்தாமல் கிளப் போட்டியை போல் கேப்டன் மெஸ்ஸி செயல்பட்டது முக்கியமாக நாங்கள் ஒரு பெரிய அணியிடம்

விளையாடுகிறோம் என்ற முரட்டு மனநிலையில் மிகவும் சுறுசுறுப்பாக சவூதி களமிறங்கியது காயம் இருந்தும் அர்ஜெண்டினா வீரர் ஏஞ்சல் டி மரியாவின் போராட்டத்தை போல அனைத்து வீரர்களும் போராடாதது என பல்வேறு நிகழ்வுகள் அர்ஜெண்டினாவின் வரலாற்று தோல்விக்கு காரணமாக அமைந்துள்ளது. கரைசேருமா அர்ஜெண்டினா?

அர்ஜெண்டினாவிற்கு இன்னும் இரண்டு ஆட்டங்கள் உள்ளன. நவ., 27-ஆம் தேதி மெக்ஸி கோவையும், டிச., 1-ஆம் தேதி போலந்து அணியையும் எதிர்கொள்கிறது. இரு அணிகளும் தடுப்பாட்டத்தில் பிரம்மாண்ட பார்மில் உள்ளன என்ப தால் இரண்டு ஆட்டங்களும் அர்ஜெண்டி னாவிற்கு கடினமாக இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

**படுதோல்வி அர்ஜெண்டினாவிற்கு சாதகத்தை உருவாக்கும்**

விளையாட்டு உலகில் வெற்றி யை விட தோல்வி தான் அதிக உந்துதலை ஏற்படுத்தும். அதன்படி அர்ஜெண்டினாவின் இந்த படுதோல்வி அந்த அணிக்கு ஒரு பாடமாக அமைந்து அடுத்து வரும் போட்டிகளில் கவனமாக விளையாடி வெற்றிநடைக்கு உதவி யாக இருக்கும் என எதிர்பார்க்கப்படு கிறது.

**விடுமுறையாக கொண்டாடிய சவூதி அரேபியா**

உலகக்கோப்பை கால்பந்து வரலாற்றில் வரலாற்று வெற்றியை ருசித்துள்ளதை கொண்டா டும் வகையில், புதனன்று பள்ளி, கல்லூரி, அரசு நிறுவனங்களுக்கு விடு முறை அளித்து சவூதி மன்னர் சல்மான் செவ்வாயன்று அறிவித்தார். சவூதி அரே பியாவின் முக்கிய நகரங்களில் அந்நா

ட்டு கொடிகளுடன் கொண்டாட்டம் நடை பெற்றது.

# 15. நவம்பர் 25, 2022



...

**குரூப் “பி”**

இன்றைய ஆட்டங்கள்

வேல்ஸ் - ஈரான்

நேரம்: மதியம் 3:30 மணி இடம்: அஹமத் பின் அலி

இரு அணிகளுக்கு இது இரண்டாவது ஆட்டமாகும். வேல்ஸ் அணி தனது முதல் ஆட்டத்தில் அமெரிக்காவிடம் டிரா செய்தது. ஈரான் அணி தனது முதல் ஆட்டத்தில் இங்கிலாந்து அணியிடம் வீழ்ந்தது.

**குரூப் “ஏ”**

கத்தார் - செனகல்

நேரம்: மாலை 6:30 மணி இடம்: அல் துமமா

இரு அணிகளுக்கு இது இரண்டாவது ஆட்டமாகும். கத்தார் அணி தனது முதல் ஆட்டத்தில் ஈகுவடாரிடம் வீழ்ந்தது. செனகல் தனது முதல் ஆட்டத்தில் நெதர்லாந்து அணியிடம் தோல்வி

கண்டது.

**குரூப் “ஏ”**

நெதர்லாந்து - ஈகுவடார்

நேரம் : இரவு 9:30 மணி இடம் : கலீபா

இரண்டு அணிகளுக்கும் இது இரண்டாவது ஆட்டமாகும். முதல் ஆட்டத்தில் நெதர்லாந்து அணி செனகலையும், ஈகுவடார் அணி கத்தாரையும் வீழ்த்தியது.

**குரூப் “பி”**

அமெரிக்கா - இங்கிலாந்து

நேரம்: நள்ளிரவு 12:30 (வெள்ளியன்று அதிகாலை) இடம்: அல் பாயித்

இரு அணிகளுக்கும் இது இரண்டாவது ஆட்டமாகும். இங்கிலாந்து அணி தனது முதல்

ஆட்டத்தில் ஈரானையும், அமெரிக்கா தனது முதல் ஆட்டத்தில் வேல்ஸ் அணியுடன் டிரா செய்தது.

## அசத்தும் ஆசிய அணிகள்

கடந்த காலங்களை போல அல்லா மல் 22-வது சீசன் உலகக்கோப்பை தொடக்கம் முதலே லீக் ஆட்டங்களில் பரபரப்பாக நடைபெற்று வருகிறது. கால்பந்து உலகில் பெரும்பாலும் சாம்பியன் அணிகள் ஆதிக்கம் செலுத்தும் பழங்கால வரலாறுகள் உள்ளன. அதிலும் முக்கிய வரலாறாக இருப்பது தென் அமெரிக்கா அல்லது ஐரோப்பா என இந்த 2 கண்டங்களைச் சேர்ந்த நாடுகள் தான் மாறி மாறி கோப்பையை வெல்லும். வட அமெரிக்கா, ஆப்பிரிக்க ஆகிய கண்டங் களைச் சேர்ந்த நாடுகள் நாக் அவுட், காலி றுதி வரை சென்று அதிர்ச்சி அளிக்கும். ஆசிய, ஆஸ்திரேலிய கண்ட அணிகளுக்கு அதிசய வாய்ப்பு, சில

அதிர்ச்சிகளால் நாக் அவுட் வாய்ப்பு கிடைக்கும். ஆனால் தொடக்க ஆட்டங்களில் சொல்லிக்கொள் ளும் அளவிற்கு பெரியளவு சோபிக் காது. ஆனால் நடப்பு சீசனில் தொடக்கத்தி லேயே சவூதி அரேபியா பலம் வாய்ந்த அர்ஜெண்டினாவையும், 4 முறை சாம்பி யன் ஆன ஜெர்மனியை 2-1 என்ற கணக்கில் ஜப்பான் அணியும் வீழ்த்தி நடப்பு சீசன் உலகக்கோப்பை தொடரின் தொடக்கத்தி லேயே மற்ற ஆசிய அணிகளுக்கு புதிய உத்வேகத்தை அளித்துள்ளது.

## உலகக்கோப்பையில் ஆசிய அணிகள்

1.ஜப்பான், 2.சவூதி அரேபியா, 3.கத்தார், 4.ஈரான், 5.தென் கொரியா, 6.ஆஸ்திரேலியா (உலகக்கோப்பை தொட ருக்கு மட்டும் ஆசிய கண்டத்தில் சேர்க்கப் பட்டுள்ளது)

# 16. மனித உரிமைக்காக குரல் கொடுத்த வீரர்கள்



…

கத்தாரில் 22-வது சீசன் உலகக்கோப்பை பல்வேறு சர்ச்சைகளுக்கு இடையே விறுவிறுப்பாக நடைபெற்று வரும் நிலையில், இரண்டு நாடுகள் மனித உரிமைகளுக்கு ஆதரவாக மைதானத்திலேயே வித்தியாசமான முறையில் போராட்டம் நடத்தினர்.

ஈரான்

**(தேசிய கீதம்)**

ஈரான் நாட்டில் ஹிஜாப் உடை கட்டாயத்திற்கு எதிராக போராட்டம் நடைபெற்று வருகிறது. இந்த போராட்டத்திற்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் ஈரான் வீரர்கள் தங்களது முதல் லீக் ஆட்டத்தின் (இங்கிலாந்துக்கு எதிராக) தொடக்க நிகழ்வின் பொழுது தங்கள் நாட்டு தேசிய கீதத்தை பாடாமல் தலைகுனிந்த படி எதிர்ப்பை பதிவு செய்தனர். இதன் காரணமாக ஈரானின் தேசிய

தொலைக்காட்சி உல கக்கோப்பையில் அந்நாட்டு போட்டியின் நேரடி ஒளிபரப்பை நிறுத்தியது.

ஈரான் வீரர்களின் போராட்டத்தை அந்நாட்டு கால்பந்து சம்மேளனம் ஆதரிக்கவில்லை. வீரர்களுக்குள் திட்டமிட்டு இந்த விவகாரம் செய்யப்பட்டுள்ளது. இந்த விவகாரத்தை போட்டி நிறைவுபெற்ற பின்பு பார்த்துக்கொள்ளலாம் என ஈரான் அரசு மற்றும் அந்நாட்டு கால்பந்து சம்மேளனம் அமைதியாக இருப்பதாக தகவல் வெளியாகியுள்ளது.

# 17. ஜெர்மனி - (ஒன் லவ்)

உலகக்கோப்பை கால்பந்து நடக்கும் வளைகுடா நாடான கத்தாரில் ஓரின சேர்க்கைக்கு தடை விதிக்கப்பட்டுள்ளது. ஓரினச்சேர்க்கையாளர்களுக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் சில நாடுகள் “ஒன் லவ் (ONE LOVE)” என்ற பெயரில் வானவில் நிறத்தில் பட்டை அணிந்து விளையாட முடிவு செய்தன. இது நடத்தை விதி மீறல் என்றும் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் சர்வதேச கால்பந்து சம்மேளனம் (பிபா) எச்சரித்தது. இதையடுத்து ஜெர்மனி வீரர்கள் ஜப்பானுக்கு எதிரான ஆட்டம் தொடங்குவதற்கு முன்பாக மைதானத்தில் தங்க ளது வாயை மூடிய படி போட்டோ வுக்கு போஸ் கொடுத்து கவனத்தை ஈர்த்தனர்.

ஜெர்மனியின் போராட்டம் அரசு மற்றும் கால்பந்து சம்மேளனத்தின் ஆதரவுடன் நடைபெற்று வருகிறது. ஜெர்மனி உள்துறை அமைச்சர் நான்சி பாசிர் வானவில் பட்டையை கையில் கட்டிக்கொண்டு உலகக்கோப்பை போட்டியை கண்டார். மேலும் “வானவில் பட்டையை அணி வதற்கு தடை விதிப்பது எங்களது பேச்சுரிமையை பறிப்பதற்கு சமமாகும். இந்த விவகாரத்தில் எங்களது நிலைப்பாட்டில் மாற்றமில்லை”' என்று ஜெர்மனி கால்பந்து சம்மேளனம் டுவிட்டர் பக்கத்தில் கூறியுள்ளது.

# 18. நவம்பர் 26 2022

இன்றைய ஆட்டங்கள்

**குரூப் “டி”**

துனிசியா - ஆஸ்திரேலியா

நேரம்: மதியம் 3:30 மணி / இடம்: அல் ஜனுவப்

இரு அணிகளுக்கும் இது இரண்டாவது ஆட்டமாகும். முதல் ஆட்டத்தில் துனிசியா,டென்மார்க் அணியிடம் டிரா செய்தது. ஆஸ்திரேலியா முதல் ஆட்டத்தில் பிரான்ஸ் அணியிடம் தோல்வியை தழுவியது.

**குரூப் “சி”**

போலந்து - சவூதி அரேபியா

நேரம்: மாலை 6:30 மணி/ இடம்: எஜுகேஷன்

சிட்டி

இரு அணிகளுக்கும் இது இரண்டாவது ஆட்டமாகும். முதல் ஆட்டத்தில் போலந்து, மெக்ஸிகோவிடம் டிரா செய்தது. சவூதி அரேபிய முதல் ஆட்டத்தில் அர்ஜெண்டினாவை வீழ்த்தியது.

**குரூப் "டி"**

பிரான்ஸ் - டென்மார்க்

நேரம்: இரவு 9:30 மணி / இடம் : 974

இரு அணிகளுக்கும் இது இரண்டாவது ஆட்டமாகும். முதல் ஆட்டத்தில் பிரான்ஸ், ஆஸ்திரேலியாவை புரட்டியெடுத்தது. டென்மார்க் தனது முதல் ஆட்டத்தில் துனிசியாவிடம் டிரா செய்தது.

**குரூப் "சி"**

அர்ஜெண்டினா - மெக்ஸிகோ

நேரம்: நள்ளிரவு 12:30 மணி (ஞாயிறன்று அதிகாலை) / இடம்: லுசைல்

இரு அணிகளுக்கும் இது இரண்டாவது ஆட்டமாகும். முதல் ஆட்டத்தில் அர்ஜெண்டினா சவூதியிடம் வீழ்ந்தது. மெக்ஸிகோ தனது முதல் ஆட்டத்தில் போலந்திடம் டிரா செய்தது.

**இன்றைய ஆட்டம் அர்ஜெண்டினாவுக்கு முக்கியம்!**

2 முறை கோப்பை வென்ற அணியும், நடப்பு சீசனில் கோப்பை வெல்லும் அணிகளில் ஒன்றாக கருதப்படும் அர்ஜெண்டினா அணி தனது முதல் ஆட்டத்தில் சவூதியிடம் வீழ்ந்தது. ஞாயிறன்று அதிகாலை நடைபெறும் 2-வது லீக் ஆட்டத்தில் மெக்ஸிகோவை எதிர்கொள்கிறது. இந்த ஆட்டம் அர்ஜெண்டினா அணிக்கு மிக முக்கியமானது ஆகும். இதில் வென்றால் மட்டுமே

நாக் அவுட் சுற்று பற்றி அர்ஜெண்டினா யோசிக்க முடியும்.மெக்ஸிகோ அணி அபாயகரமான உலகின் தடுப்பாட்டத்தை கொண்ட அணியாகும். இந்த அணியை வீழ்த்தி, அடுத்த ஆட்டத்தில் போலந்து அணியை கண்டிப்பாக வீழ்த்த வேண்டிய கட்டாயத்தில் அர்ஜெண்டினா உள்ளது. ஒரு ஆட்டத்தில் டிரா செய்தால் கூட, மற்ற அணிகளின் வெற்றி, தோல்வி, புள்ளி களை எதிர்பார்க்கும் நிலைமை ஏற்படும் என்பதால் அர்ஜெண்டினா 2 ஆட்டத்திலும் வெற்றி பெறுவது நல்லது. குரூப் "சி" பிரிவில் சவூதி ஒரு வெற்றியுடன் முதல் இடத்தில் (3 புள்ளிகளுடன்) உள்ளது. போலந்து, மெக்ஸிகோ ஆகிய அணிகள் தனது முதல் ஆட்டத்தில் டிரா செய்து ஒரு புள்ளிகளுடன் 2 மற்றும் 3-வது இடத்தில் உள்ளது.

# 19. பிரேசில் கலக்கல் - ஒரே ஒரு கோலால் லுசைல் நகரத்தையே குலுங்க வைத்த ரிச்சர்லிசன்

5 முறை உலகக்கோப்பையை வென்ற பிரேசில் அணி, அர்ஜெண்டினா அணியைப் போல நடப்பு சீசனில் கோப்பையை வெல்லும் அளவிற்கு மிக பிரம்மாண்ட பார்முடன் கத்தாரில் களமிறங்கியுள்ளது. மஞ்சள் படை ஆதரவுடன் தனது முதல் லீக் ஆட்டத்தில் செர்பியாவை எதிர்கொண்டது. லுசைல் மைதானத்தில் வெள்ளியன்று அதிகாலை நடைபெற்ற இந்த ஆட்டத்தில் பிரேசில் அணியின் ரிச்சர்லிசனின்

2 கோல்களின் உதவியால் 2-0 என்ற கோல் கணக்கில் கலக்கல் வெற்றியை ருசித்தது பிரேசில்.

செர்பியா அணிக்கெதிரான ஆட்டத்தில் பிரேசில் அணியின் 2 வெற்றி கோல்களை அடித்தவர் ரிச்சர்லிசன் (62’ ,73’ நிமிடங்களில்) ஆவார். இதில் 73-வது நிமிடத்தில் அடித்த 2-வது கோல் மிகவும் பிரம்மாண்டமானது ஆகும். ரீ டைவ் முறையில் பல்டியுடன் கோலடித்து அசத்தினார் ரிச்சர்லிசன். அவரது கோலால் மைதானத்தில் குழுமியிருந்த மஞ்சள் படையின் ஆரவாரத்தின் மூலம் போட்டி நடைபெற்ற லுசைல் நகரமே குலுங்கியது.

# 20. சுவாரஸ்யங்கள்




...

செர்பிய அணிக்கெதிரான ஆட்டத்தின் பொழுது பிரேசில் அணி பல்வேறு சம்பவங்கள்

மூலம் கால்பந்து உலகை கவர்ந்துள்ளது.

1. முன்களத்தில், பின்களத்தில் தடுப்பாட்ட முறை (இது சற்று வித்தியாசமானது ஆகும். முன்களத்தில் பந்தை கடத்தவே முயற்சிப்பார்கள். ஆனால் பிரேசிலியர்கள் முன்களத்தில் கடத்தல், தட்டுப்பாட்ட முறையில் பந்தை பறித்து கோலடிக்க தாக்குதல் பாணியை மேற்கொண்டனர்.)
2. பிட்ச் நிலைமையை பற்றி கண்டுகொள்ளாமல் அனைத்து வீரர்களும் வேகமாக ஓடினார்கள்
3. ஆட்டத்தின் 70% நேரம் பிரேசில் நாட்டிடம் பந்து சுழன்றது
4. 80% மஞ்சள் படை ரசிகர்கள் இருக்கையில் அமரவில்லை

5. கோல், கோல் சொதப்பல், மாற்று வீரர்கள் என அனைத்து சம்பவங்களுக்கும் மஞ்சள் படை கைத்தட்டல்களுடன் பாராட்டை அளித்தது
6. பலம் வாய்ந்த தடுப்பாட்ட வீரர்கள் இருந்தாலும், பிரேசில் வீரர்கள் பெரியளவு மோதலை உருவாக்க வில்லை
7. பிரேசில் அணி மஞ்சள் அட்டை எதுவும் வாங்க வில்லை.
8. செர்பியா 3 மஞ்சள் அட்டையை பெற்றது.

# 21. நவம்பர் 27 2022



...

**குரூப் “இ”**

ஜப்பான் - கோஸ்டாரிகா

நேரம் : மதியம் 3:30 மணி / இடம் : அஹமத் பின்

இரு அணிகளுக்கும் இது 2-வது ஆட்டமாகும். ஜப்பான் அணி தனது முதல் ஆட்டத்தில் பலமான ஜெர்மனி அணியை வீழ்த்தியது. கோஸ்டாரிகா தனது முதல் ஆட்டத்தில் ஸ்பெயின் அணியிடம் வீழ்ந்தது.

**குரூப் “எப்”**

பெல்ஜியம் - மொரோக்கோ

நேரம் : மாலை 6:30 மணி / இடம் : அல் துமமா

இரு அணிகளுக்கும் இது 2-வது ஆட்டமாகும். பெல்ஜியம் அணி முதல் ஆட்டத்தில் கனடாவை வீழ்த்தியது. மொரோக்கோ அணி தனது முதல் ஆட்டத்தில் பலமான குரோஷியா அணியை டிரா செய்தது.

**குரூப் “எப்”**

குரோஷியா - கனடா

நேரம் : இரவு 9:30 மணி / இடம் : கலீபா

இரு அணிகளுக்கும் இது 2-வது ஆட்டமாகும். கனடா தனது முதல் ஆட்டத்தில் பெல்ஜியம் அணியிடம் வீழ்ந்தது. குரோஷியா தனது முதல் ஆட்டத்தில் மொரோக்கோ அணியை டிரா செய்தது.

**குரூப் இ”**

ஸ்பெயின் - ஜெர்மனி

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (திங்களன்று அதிகாலை) / இடம் : அல் பாயித்

இரு அணிகளுக்கும் இது 2-வது ஆட்டமாகும். ஸ்பெயின் அணி முதல் ஆட்டத்தில் கோஸ்டாரிகாவை வீழ்த்தியது. ஜெர்மனி முதல் ஆட்டத்தில் ஜப்பானிடம் வீழ்ந்தது.

சேனல் : ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா (ஓடிடி)

இலவசமாக காணலாம்.

## ஸ்பெயினை சமாளிக்குமா ஜெர்மனி?

கடந்த உலகக்கோப்பை போன்று பார்ம் பிரச்சனையில் சிக்கியுள்ள ஜெர்மனி அணி தனது முதல் ஆட்டத்தில் சிறிய அணியான ஜப்பானிடம் வீழ்ந்து கால்பந்து உலகில் மிகப்பெரிய அதிர்ச்சி அலையை ஏற்படுத்தியது. ஜெர்மனி அணி நாக் அவுட் சுற்றுக்கு முன்னேற வேண்டு மானால் அடுத்து வரும் 2 ஆட்டங்களிலும் கட்டாயம் வெல்ல வேண்டும். சனியன்று நடைபெறும் 2-வது லீக் ஆட்டத்தில் மிகவும் பலமான ஸ்பெயின் அணியை எதிர்கொள்கிறது ஜெர்மனி. அடுத்து டிசம்பர் 2-ஆம் தேதி கோஸ்டாரிகாவை எதிர்கொள்கிறது. தடுப்பாட்டத்தில் பலமான கோஸ்டாரி காவை வீழ்த்துவது மிக எளிதான விஷயம் என்றாலும், அனைத்து பிரிவுகளிலும் முரட்டு பலத்தில்

உள்ள ஸ்பெயின் அணியை வீழ்த்த நினைப்பது அவ்வளவு சாதாரண காரியம் இல்லை. காரணம் ஸ்பெயின் தனது முதல் ஆட்டத்தில் கோஸ்டாரிகாவை 7 கோல்கள் வித்தியா சத்தில் பந்தாடி, முதல் ஆட்டத்திலேயே தனது மிரட்டலான பார்மை வெளிக்கா ட்டிய சந்தோஷத்தில் உள்ளது ஸ்பெயின். இப்படி பல்வேறு இடியாப்ப சிக்கல் உள்ள நிலையில், ஜெர்மனி எப்படி நாக் அவுட் சுற்றுக்கு செல்லும் என்பதை பொறுத்திருந்து பார்ப்போம்.

**முதல் சுற்று ஆட்டங்களில் அணிகளின் ஆட்டத்திறன் எப்படி?**

கத்தார் உலகக்கோப்பை தொடரில் தற்போது குரூப் சுற்று ஆட்டங்களில் 2-வது சுற்று ஆட்டங்கள் நடைபெற்று வருகிறது. முதல் சுற்று ஆட்டங்களில் பலமான அணிகளான

ஸ்பெயின், பிரான்ஸ், பிரேசில், இங்கிலாந்து, போர்ச்சுக்கல், நெதர்லாந்து, பெல்ஜியம் ஆகிய அணிகள் மிரட்டலான பார்முடன் விளையாடியது. 2-ஆம் தர அணிகளில் ஈகுவடார், ஜப்பான், சவூதி அரேபியா, வேல்ஸ், அமெரிக்கா ஆகிய அணிகள் நன்றாக விளையாடியது. டென்மார்க், துனிசியா, மெக்ஸிகோ, போலந்து, தென்கொரியா ஆகிய அணிகள் தடுப்பாட்டத்தில் கலக்கியது. அர்ஜெண்டினா, ஜெர்மனி, உருகுவே, குரோஷியா ஆகிய அணிகள் பார்ம் பிரச்சனையில் சிக்கி கடுமையாக சொதப்பியது. கனடா, கானா, செனகல், கேமரூன் அணிகள் போராட்டமான ஆட்டத்தை வெளிப்படுத்தியும் கடைசி நேர சொதப்பலால் தோல்வியை தழுவியது. கடந்த காலங்களை போல் அல்லாமல் நடப்பு சீசனில் சுவிட்சர்லாந்து அணி பிரம்மாண்டமாக விளையாடி அசத்தியது என்பது குறிப்பிடத்தக்கது.

## மின்னல் வேகத்தில் பறக்கும் “அல் ரிஹ்லா”





...

கத்தார் உலகக்கோப்பை தொடரில் “அல் ரிஹ்லா” என்ற பந்து பயன்படுத்தப்பட்டு வருகிறது. புகழ்பெற்ற விளையாட்டு உபகரண தயாரிப்பு

நிறுவனமான அடிடாஸ் (ADIDAS) தயாரித்துள்ள இந்த “அல் ரிஹ்லா” பந்து கடந்த கால பந்துகளை போல அல்லாமல் கூடுதல் தரத்துடன் உள்ளது. உதைப்பதற்கு, பாஸ் செய்வதற்கு, ஷாட் செய்வதற்கு என அனைத்திற்கும் பக்க பலமாக உள்ளது. ஆனால் ஆதிரடி ஷாட் செய்வதற்கு “அல் ரிஹ்லா” முதன்மையாக உள்ளது. கூடுதல் வேகத்தில் அல் ரிஹ்லாவை உதைத்தால் வித்தியாசமான சத்தத்துடன் மின்னல் வேகத்தில் பறக்கிறது.

**“அல் ரிஹ்லா” - அரபு மொழியில் பயணம்**

எல்லாம் பாகிஸ்தானின் கைவண்ணம்...

“அல் ரிஹ்லா” பந்து தயாரானது வடகிழக்கு பாகிஸ்தானில் உள்ள சியால்கோட் நகரத்தில் தான். இந்த சியால்கோட் மார்க்கத்தில் தான் உலகிற்கு தேவையான 70% கால்பந்துகள் சப்ளை

நடைபெறுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

**உடனக்குடன் "ரிப்ளே" : அசத்தும் புதிய தொழில்நுட்பம்**



…

தொழில்நுட்ப வளர்ச்சி நாளுக்குநாள்

மின்னல் வேகத்தில் வளர்ந்து வரும் நிலையில், விளையாட்டு உலகம் இந்த புதிய தொழிநுட்ப முறைகளால் பல்வேறு வளர்ச்சியை கண்டுள்ளது. இதன் முதல் எடுத்துக்காட்டு தற்போது நடைபெற்று வரும் 22-வது சீசன் உலகக்கோப்பையின் “ரிப்ளே (மீண்டும் ஒரு எடுத்துக்காட்டு ஒளிபரப்பு)” முறையில் ஏற்பட்டுள்ள அதிரடி மாற்றம் தான். பொதுவாக ஒரு நிகழ்வை “ரிப்ளே” செய்ய குறைந்தப் பட்சம் 20 வினாடிகள் ஆகும். ஆனால் கத்தார் உலகக்கோப்பை தொடரில் வெறும் 5 வினாடிகளில் “ரிப்ளே” ஒளிபரப்பு செய்யப்படுகிறது. இது கால்பந்து ரசிகர்களுக்கு புதிய அனுபவத்தைகொடுத்துள்ளது.

## 8 நிமிடத்திற்கு மேல் கூடுதல் நிமிடங்கள்...

உலகக்கோப்பை கால்பந்து தொடரில் காயம், மாற்று வீரர்கள், வார் செக்கிங் போன்ற

நிகழ்வுகளை சரிக்கட்ட கடந்த காலங்களில் முதல் பாதி, இரண்டாம் பாதியில் கூடுதலாக 3 அல்லது 4 நிமிடம் வழங்கப்படும். அதாவது முதல் பாதியில் 45 நிமிடங்கள் நிறைவு பெற்ற பின்பு கூடுதலாக 4 நிமிடங்கள் வழங்கப்படும். இதே முறை தான் 2-ஆம் பாதியிலும். ஆனால் நடப்பு சீசனில் முதல் பாதியில் 5 நிமிடங்களுக்கு கூடுதலாகவும், 2-ஆம் பாதியில் 7 நிமிடங்களுக்கும் கூடுதலாக நேரம் கொடுக்கப்படுகிறது. இதற்கு முதன்மையான காரணம் காயம் தான். அதிகமாக தண்ணீர் தெளிப்பதால் (?) பிட்ச் வழுக்குகிறது. இதனால் காயம் ஏற்படுகிறது. அடுத்து வார் செக்கிங் (சந்தேக ரிப்ளே செக்கிங்) அதிகம் கேட்கப்படுவதால் உண்டாகிறது.

# 22. நவம்பர் 28, 2022




…

இன்றைய ஆட்டங்கள்

குரூப் “ஜி”

கேமரூன் - செர்பியா

நேரம் : மதியம் 3:30 மணிக்கு, இடம் : அல் ஜனுவப்

இரு அணிகளுக்கும் இது 2-வது ஆட்டமாகும். செர்பியா தனது முதல் ஆட்டத்தில் பிரேசில் அணியிடம் வீழ்ந்தது. கேமரூன் அணி தனது முதல் ஆட்டத்தில் சுவிட்சர்லாந்து அணியிடம் வீழ்ந்தது.

குரூப் “எச்”

தென் கொரியா - கானா

நேரம்: மாலை 6:30 மணிக்கு. இடம்: எஜுகேஷன் சிட்டி

இரு அணிகளுக்கும் இது 2-வது ஆட்டமாகும். தென் கொரியா தனது முதல் ஆட்டத்தில் பலமான உருகுவே அணியை டிரா செய்தது. கானா தனது முதல் ஆட்டத்தில் போர்ச்சுக்கல் அணியிடம்

வீழ்ந்தது.

குரூப் “ஜி”

பிரேசில் - சுவிட்சர்லாந்து

நேரம் : இரவு 9:30 மணிக்கு, இடம்: 974

இரு அணிகளுக்கும் இது 2-வது ஆட்டமாகும். பிரேசில் தனது முதல் ஆட்டத்தில் செர்பியாவை வீழ்த்தியது. சுவிட்சர்லாந்து தனது முதல் ஆட்டத்தில் கேமரூன் அணியை வீழ்த்தியது.

குரூப் எச்”

போர்ச்சுக்கல் - உருகுவே

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (செவ்வாயன்று அதிகாலை), இடம் : லுசைல்

இரு அணிகளுக்கும் இது 2-வது ஆட்டமாகும். போர்ச்சுக்கல் அணி தனது முதல் ஆட்டத்தில்

கானாவை வீழ்த்தியது.  உருகுவே தனது முதல் ஆட்டத்தில் தென் கொரியா அணியை டிரா செய்தது.

சேனல் : ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா (ஓடிடி) இலவசமாக காணலாம்.

**ஆசிரியர் போல அசத்திய நடுவர்**

அர்ஜெண்டினா - மெக்ஸிகோ ஆட்டத்தில் கள நடுவராக பணியாற்றியவர் இத்தாலியைச் சேர்ந்த டேனியல் ஓர்சாடோ (47) மிகவும் பொறு மையாக செயல்பட்டு அசத்தினார். கோலடிப் பதை விட்டுவிட்டு மோதல் போக்கில் இரு அணி களும் கவனம் செலுத்தியதால் மோதல், விதி மீறல், காய தாக்குதல் என பல்வேறு சம்பவங்கள் அரங்கேறின. இதையெல்லாம் பொறுத்துக் கொண்டு பள்ளி ஆசிரியர்கள் குழந்தைகளுக்கு அறிவுரை கூறுவது போல எச்சரிக்கை உத்தரவு களுடன் வீரர்களை

மன்னித்து விட்டார். இந்த ஆட்டத்தில் வேறொரு நடுவர் களமிறங்கியி ருந்தால் மிக அதிகளவில் மஞ்சள், சிவப்பு அட்டை கொடுக்கப்பட்டிருக்கும்.

**யார் இந்த டேனியல் ஓர்சாடோ**

கத்தார் உலகக் கோப்பையை துவங்கி வைத்த நடுவர் என்ற பெயர் பெருமையை பெற்ற இத்தாலியின் டேனியல் ஓர்சாடோ ஐரோப்பா வின் மிகவும் அனுபவம் வாய்ந்த நடுவர்களில் ஒருவராவர். கால்பந்து உலகில் மிகவும் அனு பவம், இக்கட்டான சூழ்நிலையில் கவனமாக போட்டியை தொடர்ந்து நடத்துவது என பல்வேறு சிறப்புகளை கொண்டவர். இவருக்கு கால்பந்து உலகில் தனி ரசிகர்கள் பட்டாளம் உண்டு. வீரர்கள், கிளப், சர்வதேச நாடுகள், பிபா என அனைத்து இடங்களிலும் இவருக்கு தனி மரியாதை உள்ளது. இத்தகைய சிறப்பால் உலகக்கோப்பை யில்

விளையாடும் தகுதியை இழந்த இத்தாலி நாட்டிற்கு நடுவர் மூலம் சிறப்பு அங்கீகாரம் கிடைத்தது. 2016-ஆம் ஆண்டு முதல் சர்வதேச கால்பந்து விளையாட்டுகளுக்கான நடுவர் மற்றும் போட்டி அதிகாரிகளுக்கு வயது வரம்பை 45-ஆக குறைத்தது பிபா. ஆனால் டேனியலின் வயது 47ஆக இருப்பினும் அவரது பண்பு, புகழ் அடிப்படையில் சிறப்பு அந்தஸ்து கொடுத்து உல கக்கோப்பையில் களமிறக்கி அழகு பார்த்தது பிபா...

## அர்ஜெண்டினா அமர்க்களம்

22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து தொட ரில் தற்போது குரூப் சுற்றின் 2-ஆம் கட்ட சுற்று ஆட்டங்கள் நடைபெற்று வருகின்றன. கடந்த காலங்களை போல் அல்லாமல் நடப்பு சீசனில் முதல் சுற்று ஆட்டங் களே மிக பரபரப்பாக

நடைபெற்று வரும் நிலையில், கால்பந்து உலகம் அதிகம் எதிர்பார்த்த குரூப் “சி” பிரி வின் அர்ஜெண்டினா - மெக்ஸிகோ அணிகள் மோதிய ஆட்டம் லுசைல் மைதானத்தில் ஞாயிறன்று அதி காலை நடைபெற்றது. தொடக்கம் முதலே பரபரப்பாக நடைபெற்ற இந்த ஆட்டத்தில் அர்ஜெண்டினா அணி 2-0 என்ற கோல் கணக்கில் அபார வெற்றி பெற்று, குரூப் “சி” பிரிவில் நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறு வதற்கான வாய்ப்பு பட்டியலில் இடம்பிடித்துள்ளது.

**ஆட்டத்தின் சுவாரஸ்ய சம்பவங்கள்:**

1. முதல் பாதியில் இரு அணிகளும் கோலடிக்க பெரி யளவு முயற்சிகளில் ஈடுபடாமல் தடுப்பாட்டத்தில் மட்டுமே கவனம் செலுத்தியது. இதனால் முதல் பாதியில் ஒவ்வொரு நிமிடமும் அனல்

பறந்தது. எனினும் மெக்ஸிகோ வீரர்கள்தான் தடுப்பாட்டத்தில் ஆதிக்கம் செலுத்தினர்.

2. இரண்டாம் பாதியில் சுதாரித்துக்கொண்ட அர் ஜெண்டினா பிரேசில் பாணியில் முன்கள தடுப்பாட்ட (பந்தை பறிக்கும் தாக்குதல்) ஆட்டத்தை வெளிப் படுத்தி அடுத்தடுத்து 2 கோல்கள் அடித்தது.

3. அர்ஜெண்டினா அணியின் வெற்றியை தடுக்க மெக்ஸிகோ வீரர்கள் காயத்தை ஏற்படுத்தும் அள விற்கு தாக்குதல் நடத்தினர். இதை எல்லாம் சமா ளித்துதான் அர்ஜெண்டினா அணி வெற்றி பெற் றது.

4. ஆட்டத்தின் முழுநிமிடங்களிலும் அர்ஜெண்டினா வின் பயிற்சியாளர்

லயோனல் ஸ்கலோனி தனது இருக்கையில் அமராமல் நின்று கொண்டே ஒவ் வொரு உத்தரவுகளையும் பிறப்பித்தார். (கிட்டத் தட்ட 96 நிமிடங்கள் - ஒன்றரை மணிநேரத்திற்கு மேலாக). ஸ்கலோனி போலவே ரசிகர்களும் அமரவே இல்லை.

5. பந்து மைய பகுதியில் தான் அதிக நேரம் சுழன்றது. (பால் கட்டுப்பாடு ; அர்ஜெண்டினா - 59%, மெக்ஸிகோ - 41%) * மெக்ஸிகோ வீரர்களின் உடல் தாக்குதல் பாணி ஆட்டத்தை கண்டித்து அர்ஜெண்டினா ரசிகர்கள் கோஷங்களை எழுப்பினர்.

6. அர்ஜெண்டினா சார்பில் அடிக்கப்பட்ட இரண்டு கோல்களும் மிரட்டலான வேகத்தில் அதிரடியாக போடப்பட்டது. இதில்

பெர்னாண்டஸ் அடித்த கோல் சூப்பர் பாஸ்டில் பறந்தது. மெஸ்ஸி புத்திக்கூர்மை யாக செயல்பட்டு மின்னல் வேகத்தில் உதைத்து கோலாக்கினார்.(மெஸ்ஸி : 64-வது நிமிடம், பெர் னாண்டஸ்: 87-வது நிமிடம்)

# 23. நவம்பர் 29, 2022




…

இன்றைய ஆட்டங்கள்

குரூப் “ஏ”

ஈகுவடார் - செனகல்

நேரம் : இரவு 8:30 மணி/ இடம் : கலீபா

குரூப் “ஏ”

நெதர்லாந்து - கத்தார்

நேரம் : இரவு 8:30 மணி / இடம் : அல் பாயித்

குரூப் “பி”

அமெரிக்கா - ஈரான்

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (புதனன்று அதிகாலை) / இடம் : அல் துமமா

குரூப் “பி”

வேல்ஸ் - இங்கிலாந்து

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (புதனன்று அதிகாலை) / இடம் : அஹமத் பின் அலி

## ஆட்ட நேரங்கள் மாற்றம்

திங்களன்று நடைபெறும் ஆட்டங்களின் நேரம் மாற்றப்பட்டுள்ளது. உலகக்கோப்பை தொடங்கிய தினத்திலிருந்து ஒவ்வொரு நாளும் மதியம் 3:30, மாலை 6:30, இரவு 9:30, நள்ளிரவு 12:30 மணி ஆகிய 4 நேரங்களில் 4 ஆட்டம் நடைபெற்றது. ஆனால் திங்களன்று நடைபெறும் லீக் ஆட்டங் களின் நேரம் முற்றிலும் மாற்றப்பட்டுள்ளது. இரவு 8:30 மணிக்கு 2 ஆட்டங்கள், நள்ளிரவு 12:30 மணிக்கு 2 ஆட்டங்கள் என 4 ஆட்டங்கள் நடை பெறுகிறது. வரும் காலங்களில் இதே நேரங்களில்தான் ஆட்டம் நடைபெறும்.

## மொராக்கோ அணியிடம் படுதோல்வி பெல்ஜியத்தில் ரசிகர்கள் வன்முறை

குரூப் “எப்” லீக் ஆட்டத்தில் பலம் வாய்ந்த ஐரோப்பிய அணி யான பெல்ஜியம், இரண்டாம்

தர ஆப்பிரிக்க அணியான மொராக்கோவை எதிர்கொண்டது. தனி வியூகம் அமைத்து தொடக்கம் முதலே தாக்குதல் பாணி ஆட்டத்தை கையிலெடுத்தது மொராக்கோ. இதனை எதிர்பாராத பெல்ஜி யம் தொடக்கம் முதலே திணறியது. இறுதியில் 2-0 என்ற கோல் கணக்கில் வெற்றி பெற்று பெல்ஜியத்திற்கு அதிர்ச்சி வைத்தியம் அளித்தது மொராக்கோ. பெல்ஜியத்தின் தோல்வி போட்டி நடை பெற்ற மைதானத்தில் எவ்வித எதிர்ப்பும் கிளம்பவில்லை. ஆனால் பெல்ஜியம் தலைநகர் பிரஸ்ஸல்ஸில் அந்நாட்டு கால்பந்து ரசிகர்கள் வன்முறையில் ஈடுபட்டனர். மொரோக்கோ கொடியை தீவைத்து கொழுத்தி, கார்கள், பைக்குகளுக்கு தீ வைத்து வன்முறையில் ஈடுபட்டனர். சம்பவ இடத்திற்கு விரைந்து சென்ற போலீ சார் வன்முறையை கட்டுப்படுத்தி

சம்பவ இடத்தில் இருந்த சில ரசிகர்களை கைது செய்தனர். கடந்த உலகக்கோப்பையில் பெல்ஜியம் அணி அரையிறுதியில் பிரான்ஸ் அணியிடம் தோல்விகண்டு, மூன்றாம் இடத்திற்கான ஆட்டத்தில் இங்கி லாந்து அணியை வீழ்த்தி 3-ஆம் இடம் பிடித்தது. இம்முறை பல்வேறு பார்ம் பிரச்ச னையால் சிக்கித்தவிக்கிறது பெல்ஜியம்.

**‘முழு’ பந்தை உருட்டிய ‘கால்’ பந்துகள்!**

உலகக்கோப்பை கால்பந்து வரலாற்றில் சிறிய அணிகள் (இரண்டாம் தர அணிகள்) முதல்தர மற்றும் சாம்பியன் அணிகளுக்கு சில அதிர்ச்சி தோல்விகளை அளிக்கும். ஒன்றிரெண்டு அணிகள் நாக்-அவுட் சுற்றுக்கு செல்லும். சிறிய அணிகள் காலிறுதிக்குச் சென்ற வரலாறுகளும் உண்டு. ஆனால் நடப்பு சீசன் உலகக்கோப்பையில் எல்லாம் வித்தியாசமாக நடைபெற்று வருகிறது.

பல முதல் தர அணிகள் சிறிய அணிகளிடம் தோல்வியை சந்தித்துள்ளது. சில அணிகள் கடுமையாக போராடி வெற்றி பெற்றுள்ளது. பெரிய அணிகளிடம் கூட வியூகம் அமைக்கலாம். ஆனால் சிறிய அணிகளிடம் எப்படி வியூகம் அமைப்பது? நாக் அவுட் சுற்றுக்கு எப்படி முன்னேறுவது? என பல்வேறு இடியாப்ப சிக்கலில் விழித்து வருகிறது பல சீனியர் அணிகள்.

**நடப்பு சீசன் அதிர்ச்சிகள்**

1. சவூதி அரேபியா - அர்ஜெண்டினா வை 2-1 என்ற கணக்கில் வீழ்த்தியது

2. வேல்ஸ் - பலமான அமெரிக்கவை டிரா செய்தது

3. மொரோக்கோ - குரோஷியா அணியை

டிரா செய்தது மட்டுமல்லாமல், பெல்ஜி யம் அணியை பந்தாடியது

4. ஜப்பான் - 4 முறை சாம்பியனான ஜெர்மனியை புரட்டியெடுத்தது

5. தென் கொரியா - பலம் வாய்ந்த அணி யான உருகுவேயை டிரா செய்தது

6. ஆஸ்திரேலியா - கால்பந்து உலகில் புகழ்மிக்க அணியான துனிசியாவிற்கு அதிர்ச்சி அளித்தது லீக் சுற்று ஆட்டங்களிலேயே சிறிய அணிகள் தங்களது மிரட்டலான ஆட்டத்தை வெளிப்படுத்தி முதல் தர அணிகளை மிரட்டி வருவது விளை யாட்டு உலகில் கால்பந்து விளை யாட்டின் அந்தஸ்து மேலும் உயர்ந்து வருகிறது.

## இளம் கன்றுகளின் ஆதிக்கத்திற்கு காரணம்?

- சிறிய அணிகளில் இருப்பவர்கள் பெரும்பாலும் இளம் வீரர்கள் (20 வயதிற்குள்)

- வயதிற்கு ஏற்ப இளம் வீரர்கள் குதிரை வேகத்தில் மைதானத்தில் ஓடுவது, தடுப்பாட்டத்தில் சண்டை செய்யும் அளவிற்கு மோதுவது

- பயிற்சியாளர் கூறும் உத்தரவுகளை வடிகட்டாமல் அப்படியே உள்வாங்குவது. (சீனியர் அணிகளில் சில வீரர்கள் பயிற்சியாளர்கள் கூறுவதை தலையில் அல்ல, காதில் கூட போட்டுக்கொள்ளமாட்டார்கள்)

- எங்களுக்கு கோப்பை கிடைக்காது. ஆனால்

கடந்த சீசனை விட நடப்பு சீசனில் ஒரு படி முன்னேறுவோம் என்ற மனநிலையில் விளையாடுவது.

- பதற்றம் இல்லாமல் இருப்பது (சீனியர் அணிகள் கோப்பை, அடுத்த சுற்று பற்றிய கவலையில் பதற்றத்துடன் இருப்பார்கள்)

- நாங்கள் பெரிய அணிகளுடன் மோதுகிறோம் என்ற எண்ணத்துடன் இந்த இளம் வீரர்கள் வியூகம் அமைப்பது

- பெரிய அணிகளை எதிர்கொள்ள முரட்டு மனநிலையில் களமிறங்குவது

- கோலடித்துதான் பார்ப்போமே "இளம் கன்று பயமறியாது" என்பது போல அதிரடி

முயற்சியில் களமிறங்குவது

- பெரிய அணிகளுக்கு எளிதாக வியூகம் அமைக்கலாம். காரணம் அவர்களின் ஆட்டத்திறன் கால்பந்து உலகிற்கு நன்கு தெரியும். ஆனால் சிறிய அணிகளின் ஆட்டத்திறன் அனுபவம் இல்லாததால் இளம் அணிகளுக்கு வியூகம் அமைக்க முடியாமல் கடுமையாக திணறுகிறது சீனியர் நாடுகள்

- இந்த அணி நம்மை வீழ்த்தி விடுமோ என்ற செருக்கான மனநிலையில் பெரிய அணிகள் விளையாடுவது

- இது சிறிய அணி தானே என நட்சத்திர வீரர்களுக்கு ஓய்வு அளிப்பது இப்படி பல்வேறு சம்பவங்களால் ஜூனியர் அணிகளிடம்

பலம்வாய்ந்த சீனியர் நாடுகள் மண்ணை கவ்வுகின்றன.

# 24. நவம்பர் 30, 2022

**இன்றைய ஆட்டங்கள்**

புதனன்று முதல் லீக் சுற்றுகளின் மூன்றாவது சுற்று ஆட்டங்கள் தொடங்குகிறது. இதுவரை 3 அணிகள் மட்டுமே நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறிய நிலையில், மீதமுள்ள 13 நாக் அவுட் இடங்களை நிரப்புவதற்கான லீக் சுற்றுகளின் மூன்றாவது சுற்று ஆட்டங்கள் மிக முக்கியமானது என்பதால் இனி ஒவ்வொரு ஆட்டமும் அனல் பறக்கும்.

குரூப் “டி”

பிரான்ஸ் - துனிசியா

நேரம் : இரவு 8:30 மணி / இடம்: எஜுகேஷன் சிட்டி

குரூப் “டி”

ஆஸ்திரேலியா - டென்மார்க்

நேரம் : இரவு 8:30 மணி / இடம் : அல் ஜனுவப்

குரூப் “சி”

அர்ஜெண்டினா - போலந்து

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (வியாழனன்று அதிகாலை / இடம் : 974

குரூப் “சி”

சவூதி அரேபியா - மெக்ஸிகோ

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (வியாழனன்று அதிகாலை) / இடம் : லுசைல்

**பலத்த பாதுகாப்பையும் மீறி நுழைந்த போராட்டக்காரர்**

போர்ச்சுக்கல்-உருகுவே ஆட்டம் கத்தார்

நாட்டின் இரண்டாவது பெரிய நகரமான லுசைல் நகர மைதானத்தில் நடைபெற்றது. இந்த ஆட்டத்தில் போர்ச்சுக்கல் அணி 2-0 என்ற கணக்கில் பலமான உருகுவே அணியை வீழ்த்திய நிலையில், ஆட்டத்தின் இரண்டாம் பாதியில் பலத்த சர்வதேச பாதுகாப்பையும் மீறி “உக்ரைனை காப்பாற்றுங்கள் (Save Ukraine)”, “ஈரான் பெண்களுக்கு மரியாதை (Respect for Iranian woman)” வாசகங்கள் பொருந்திய டி-சர்ட் உடன் ஓரினச் சேர்க்கை ஆதரவு வானவில் கொடியை ஏந்தி மைதானத்தில் போட்டிக்கு இடையே ஓடிய நபரை போலீசார் கைது செய்தனர்.

**நாக் அவுட் சுற்றில் 3 அணிகள்**

லீக் சுற்றிலேயே பரபரப்பாக நடைபெற்று வரும் கத்தார் உலகக்கோப்பை தொடரில் 3 அணிகள் நாக் அவுட் சுற்றுக்கு (செவ்வாயன்று மாலை

நிலவரப்படி) முன்னேறியுள்ளன. முதல் அணியாக குரூப் “டி” பிரிவில் உள்ள நடப்பு சாம்பியனான பிரான்ஸ் அணி முன்னேறியது. குரூப் “ஜி” பிரிவில் உள்ள பிரேசில் அணி 2-வது அணியாக நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறிய நிலையில், குரூப் “எச்” பிரிவில் ரொனால்டோவின் போர்ச்சுக்கல் அணியும் நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறியது. குரூப் “ஏ” பிரிவில் போட்டியை நடத்தும் கத்தார் அணியும், குரூப் “எப்” பிரிவில் உள்ள கனடா அணியும் உலகக்கோப்பை தொடரில் இருந்து வெளியேறியது.

**லீக் ஆட்டங்களிலேயே நாக் அவுட் பிரச்சனை-1**

கரையேறுமா ஜெர்மனி

குரூப் “இ” பிரிவு (புள்ளிப்பட்டியல்)

நாடு - ஆட்டம் - வெற்றி - டிரா - தோல்வி - புள்ளிகள் ஸ்பெயின் - 2 - 1 - 1 - 0 - 4 ஜப்பான் - 2 -

1 - 0 - 1 - 3 கோஸ்டாரிகா - 2 - 1 - 0 - 1 - 3 ஜெர்மனி - 2 - 0 - 1 - 1 - 1

## லீக் சுற்றின் கடைசி ஆட்ட வெற்றி கணிப்பு

ஜெர்மனி- கோஸ்டாரிகா : பலம், பார்ம் அடிப்படையில் - ஜெர்மனி வெல்லலாம் ஸ்பெயின்- ஜப்பான்: பலம், பார்ம் அடிப்படையில் - ஸ்பெயின் வெல்லலாம் ஸ்பெயின் : வெற்றி பெற்றால் நேராக நாக் அவுட். தோல்வி மற்றும் டிரா நிகழ்ந்தால் மற்ற அணிகளின் வெற்றி தோல்வி, கோல் கணக்குகளை எண்ண வேண்டிய நிலை ஏற்படும். ஜப்பான், கோஸ்டாரிகா : வெற்றிபெற்றால் நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறும். டிரா, தோல்வி கண்டால் கோல் அடிப்படையில் சிக்கல் உருவாகும்.

கடந்த உலகக்கோப்பை போல் அல்லாமல் நடப்பு சீசனில் ஒவ்வொரு ஆட்டமும் அனல் பறக்கிறது. சீனியர் அணிகளின் அனுபவ ஆட்டம்,

இளம் அணிகளின் பயமரியா ஆட்டங்களால் லீக் சுற்றே காலிறுதி போல கலக்கலாக உள்ளது. இளம் அணிகளின் அதிரடி ஆட்டங்களால் சில சீனியர் அணிகள் படுதோல்வியை சந்தித்து வரும் நிலையில், பல சீனியர் அணி கள் திக்கு திணறி வெற்றி பெற்றது.  சில அணிகள் டிரா செய்தாலே போதும் என தடுப்பாட்டத்தில் கவனம் செலுத்தி டிரா செய்தது.  இளம் அணிகளால் அதிகம் பாதிக்கப்பட்டது 4 முறை சாம்பியனான ஜெர்மனி, 2 முறை சாம்பியனான உருகுவே, கடந்த சீசனில் மூன்றாம் இடத்தை பிடித்த பலம் வாய்ந்த அணியான பெல்ஜியம் ஆகிய அணிகள்தான். குரூப் “இ” பிரிவில் டிசம்பர் 2-ஆம் தேதியன்று கடைசி லீக் ஆட்டங்கள் நடைபெறுகிறது. நள்ளிரவு 12:30 மணிக்கு (அதிகாலை) ஒரே நேரத்தில் ஸ்பெயின் - ஜப்பான் அணிகளும், ஜெர்மனி - கோஸ்டாரிகா அணிகளும் மோதுகின்றன. இந்த 2

ஆட்டங்களும் ஜெர்மனி அணிக்கு முக்கியமான தாகும். கோஸ்டாரிகாவை ஜெர்மனி அதிக கோல் வித்தியாசத்தில் வீழ்த்த வேண்டும். அதே போல ஸ்பெயின் அணி ஜப்பான் அணியை வீழ்த்த வேண்டும். இவ்வாறு நடந்தால் 4 புள்ளிகளுடன் ஜெர்மனி நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறும். இரண்டு ஆட்டங்களும் டிராவில் முடிவடைந்தாலும், ஸ்பெயின் - ஜப்பான் ஆட்டம் டிரா வில் முடிவடைந்தாலும், ஜெர்மனி அணியின் நாக் அவுட் கனவு அவுட் ஆகும்.

## மெஸ்ஸிக்கு கொலை மிரட்டல் விடுத்த குத்துச்சண்டை வீரர்

உலகக்கோப்பை கால்பந்து தொடரில் பல்வேறு சிக்கலுக்கு இடையே 2-வது லீக் ஆட்டத்தில் மெக்ஸிகோ அணியை 2-0 என்ற கோல் கணக்கில் வீழ்த்தி அர்ஜெண்டினா




...

அணி நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெறும் படிகளில் காலடி வைத்தது. டிசம்பர் 1-ஆம் தேதி போலந்து அணிக்கெதிரான ஆட்டத்தின் முடிவில் அர்ஜெண்டினாவின் நாக் அவுட் சுற்று வாய்ப்பு பற்றிய இறுதி முடிவு தெரியவரும். இந்நிலையில், மெக்ஸிகோ அணியை வீழ்த்திய பிறகு உடைமாற்றும் அறையில் அர்ஜெண்டினா வீரர்கள் பாட்டு,நடனம் என மகிழ்ச்சியை கொண்டாடினர். இந்த கொண்டாட்டத்தில் கால்பந்து உலகின் நட்சத்திர வீரரும், அர்ஜெண்டினா அணியின் கேப்டனுமான மெஸ்ஸி, மெக்ஸிகோ ஜெர்சியை

வைத்து தரையை துடைத்ததாக மெக்ஸிகோ குத்துச்சண்டை வீரர் கேனலோ ஆல்வாரெஜ் குற்றம்சாட்டி, மெஸ்ஸிக்கு கொலை மிரட்டல் விடுத்துள்ளார். இதுபற்றி ஆல்வாரெஜ் டுவிட்டர் பக்கத்தில், “நமது (மெக்ஸிகோ) ஜெர்சியை பயன்படுத்தி மெஸ்ஸி தரையை துடைத்துள்ளார். இதனை பார்த்தீர்களா நண்பர்களே? மெஸ்ஸியை நான் எங்கேயாவது பார்த்தேன் என்றால் அவரை வாகனம் ஏற்றி கொன்று விடவேண்டாம் என்று அவர் கடவுளிடம் வேண்டிக் கொள்ளட்டும். மெஸ்ஸியின் அந்தஸ்துக்கு மெக்ஸிகோவின் கொடி மற்றும் சட்டையை மதிக்க வேண்டும். அர்ஜெண்டினாவை நான் மதிப்பதுபோல், மெக்ஸிகோவை மெஸ்ஸி மதிக்க வேண்டும்” என மிரட்டல் விடும் நோக்கில் பதிவிட்டுள்ளார். மெஸ்ஸி காலால் மெக்ஸிகோவின் ஜெர்சியை அவமதித்தார் என்ற தலைப்பில் வீடியோ ஒன்றும்

சமூக வலைத்தளங்களில் டிரெண்ட் ஆகி வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

# 25. டிசம்பர் 1, 2022

**சிக்கலை சமாளிக்குமா உருகுவே?**

ஒரு தோல்வி, ஒரு டிரா என வெறும் ஒரு புள்ளிகளுடன் குரூப் “எச்” பிரிவில் கடைசி இடத்தில் உள்ளது உருகுவே. டிசம்பர் 2-ஆம் தேதி இரவு 8:30 மணிக்கு குரூப் “எச்” பிரிவின் கடைசி லீக் ஆட்டங்கள் (கானா - உருகுவே, போர்ச்சுக்கல் - தென்கொரியா) நடைபெறுகிறது. இந்த 2 ஆட்டங்களில் கானாவை உருகுவே கண்டிப்பாக வீழ்த்த வேண்டும். போர்ச்சுக்கல், தென் கொரியாவை வீழ்த்த வேண்டும். இப்படி நடந்தால் உருகுவே நாக் அவுட் சுற்றுக்கு எளிதாக முன்னேறும். கானாவை உருகுவே வீழ்த்தி, போர்ச்சுக்கல் - தென் கொரியா ஆட்டம் டிரா ஆனாலும் உருகுவே நாக் அவுட்டுக்கு தகுதி பெறும்.

கானா - உருகுவே ஆட்டம் டிரா ஆனால் உருகுவே மூட்டை முடிச்சுக்களை கட்டி விமான நிலையம் செல்ல வேண்டியதுதான்.

**குரூப் “எச்” பிரிவு (புள்ளிப்பட்டியல்)**

நாடு - ஆட்டம் - வெற்றி - டிரா - தோல்வி - புள்ளிகள்

போர்ச்சுக்கல் - 2 - 2 - 0 - 0 - 6 கானா - 2 - 1 - 0 - 1 - 3 தென்கொரியா - 2 - 0 - 1 - 1 - 1 உருகுவே - 2 - 0 - 1 - 1 - 1

**வெற்றி கணிப்பு**

கானா-உருகுவே: பலம், பார்ம் அடிப்படையில் - உருகுவே வெல்லலாம் போர்ச்சுக்கல்-தென்கொரியா: பலம், பார்ம் அடிப்படையில் - போர்ச்சுக்கல் வெல்லலாம்

போர்ச்சுக்கல்: நாக் அவுட் சுற்றுக்கு

முன்னேறிவிட்டது. இந்த ஆட்டம் பெரிய பாதிப்பை ஏற்படுத்தாது. தென்கொரியா: வென்றால் நாக் அவுட் வாய்ப்புள்ளது (அதிர்ஷ்டத்தில் கிடைக்கலாம்). தோற்றால் கத்தார் ஏர்வேஸ் விமானம்தான். கானா: வென்றால் நாக் அவுட் சுற்று. தோற்றால் அவுட்

**நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறுமா பெல்ஜியம்?**

கடந்த சீசனில் அபாரமான ஆட்டத்தை வெளிப்படுத்தி அபாயகரமான அணியாக வலம் வந்த பெல்ஜியம் அணி நடப்பு சீசனில் பார்ம் பிரச்சனை காரணமாக குரூப் “எப்” பிரிவில் கானல் நீரைப் போன்று காணாத இடத்தில் உள்ளது. டிசம்பர் 1-ஆம் தேதி இரவு 8:30 மணிக்கு குரூப் “எப்” பிரிவில் குரோஷியா - பெல்ஜியம், கனடா - மொரோக்கோ 2 ஆட்டங்கள் ஒரே நேரத்தில் நடைபெறுகிறது. இந்த 2 ஆட்டங்களில்

குரோஷியாவை பெல்ஜியம் வீழ்த்த வேண்டும். மேலும் கனடா - மொரோக்கோவை வீழ்த்த வேண்டும் அல்லது ஆட்டம் டிரா ஆக வேண்டும். இவ்வாறு நடந்தால் பெல்ஜியம் நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறும். குரோஷியா பெல்ஜியத்தை வீழ்த்தினாலோ, மொரோக்கோ கனடாவை வீழ்த்தினாலோ, குரோஷியா பெல்ஜியத்தை வீழ்த்தி கனடா - மொரோக்கோ ஆட்டம் டிரா ஆனாலோ மொரோக்கோ அணி நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறும். முக்கியமாக இந்த இரு ஆட்டங்கள் டிரா ஆனாலும் மொரோக்கோ தான் நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறும். பெல்ஜியத்தின் நாக் அவுட் வாய்ப்பு ஆப் சைட் கோல் போன்றுதான்.

## குரூப் “எப்” பிரிவு (புள்ளிப்பட்டியல்)

நாடு - ஆட்டம் - வெற்றி - டிரா - தோல்வி - புள்ளிகள் குரோசியா - 2 - 1 - 1 - 0 - 4 மொரோக்கோ -

2 - 1 - 1 - 0 - 4 பெல்ஜியம் - 2 - 1 - 0 - 1 - 3 கனடா - 2 - 0 - 0 - 2 - 0

## வெற்றி கணிப்பு

குரோஷியா- பெல்ஜியம் : பலம், பார்ம் அடிப்படையில் - குரோஷியா வெல்லலாம் கனடா- மொரோக்கோ : பலம், பார்ம் அடிப்படையில் - மொரோக்கோ வெல்லலாம்

## குரோஷியாவிற்கும் சிக்கல்

பெல்ஜியத்துடனான கடைசி ஆட்டத்தில் வெற்றி அல்லது டிரா செய்தால் குரோஷியா அணி எளிதாக நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறும். தோல்வி அடைந்தால் கோல் பிரச்சனையில் சிக்க வேண்டி இருக்கும். மொரோக்கோ: வென்றால், டிரா செய்தால் நாக் அவுட் சுற்று. தோற்றால் அவுட் கனடா: ஏற்கெனவே வெளியேறிவிட்டது. இந்த ஆட்டம் வெறும் சம்பிரதாயம்தான்

**கத்தாரில் ஒட்டக காய்ச்சல் பரவல் கலக்கத்தில் கால்பந்து ரசிகர்கள்**

கத்தார் உலகக் கோப்பை தொடரில் இளம் அணிகளின் அதிரடி ஆட்டத்தால் லீக் சுற்று முதலே ஒவ்வொரு ஆட்டமும் பரபரப்பாக நடைபெற்று வரும் நிலையில் கத்தார் செல்லும் ரசிகர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் அதிகரித்து வரும் நிலையில், 2 நாட்களுக்கு முன் உலக சுகாதார அமைப்பு நிபுணர்கள் புதிய எச்சரிக்கை ஒன்றை விடுத்தனர். அது யாதெனில் மத்திய கிழக்கு நாடுகளில் மெர்ஸ் (ஒட்டக காய்ச்சல்) எனப்படும் சுவாச பாதிப்பு நோய் பரவல் தற்போது வேகமாக பரவி வருகிறது எனவும் கொரோனாவை விட கொடியது என எச்சரித்து உள்ளனர். கொரோனா, எம்-பாக்ஸ் (குரங்கம்மை) உள்ளிட்ட அதிக ஆற்றல் வாய்ந்த தொற்று ஆபத்துகளை ஏற்படுத்தக் கூடிய 8 வகையான பாதிப்பு வகைகளில் ஒட்டக

காய்ச்சலும் ஒன்று என சமீபத்திய ஆய்வு அறிக்கை தெரிவித்து உள்ளது. கத்தாரில் 28 பேருக்கு மெர்ஸ் பாதிப்பு (10 லட்சம் பேரில் 1.7 பேருக்கு பாதிப்பு) ஏற்பட்டு உள்ளது என நோய்த்தொற்று அறிவியல் தரவுகளும் வெளியாகியுள்ளது. உலகக்கோப்பை கால்பந்து போட்டியை காண சென்றுள்ள லட்சக்கணக்கான ரசிகர்கள் கவனமுடன் இருக்கும்படியும் உலக சுகாதார நிபுணர்கள் எச்சரிக்கை விடுத்துள்ளனர்.

**இன்றைய ஆட்டங்கள்**

குரூப் “எப்”

குரோஷியா - பெல்ஜியம்

நேரம்: இரவு 8:30 மணி இடம்: அஹமத் பின் அலி

குரூப் “எப்”

மொரோக்கோ - கனடா

நேரம்: இரவு 8:30 மணி இடம்: அல் துமமா

குரூப் “இ”

ஜப்பான் - ஸ்பெயின்

நேரம்: நள்ளிரவு 12:30 மணி (வெள்ளியன்று அதிகாலை)

குரூப் “இ”

ஜெர்மனி - கோஸ்டாரிகா

நேரம்: நள்ளிரவு 12:30 மணி (வெள்ளியன்று அதிகாலை) இடம்: அல் பாயித்

சேனல் : ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா (ஓடிடி) இலவசமாக காணலாம்

**நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறிய அணிகள்**

குரூப் “ஏ” - நெதர்லாந்து, செனகல் குரூப் “பி”

- இங்கிலாந்து, அமெரிக்கா குரூப் “டி” - பிரான்ஸ் குரூப் “ஜி” - பிரேசில் குரூப் “எச்” - போர்ச்சுக்கல்

மாலை 5 மணி நிலவரப்படி மொத்தம் 7 அணிகள் நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெற்றுள்ளன.

# 26. டிசம்பர் 2, 2022

**நாக் அவுட்டில் அர்ஜெண்டினா**

2 முறை சாம்பியனான அர்ஜெண்டினா அணி நடப்பு சீசன் உலகக்கோப்பை கால்பந்து தொடரின் முதல் ஆட்டத்தில் இளம் அணியான சவூதியிடம் 2-1 என்ற கோல் கணக்கில் தோல்வியை தழுவியது. இதனால் கடுமையான விமர்சனத்தை எதிர்கொண்ட அர்ஜெண்டினா தீவிர பயிற்சியில் களமிறங்கி 2-வது லீக் ஆட்டத்தில் மெக்ஸிகோவை 2-0 என்ற கணக்கில் வீழ்த்தியது. இந்நிலையில் நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெற கட்டாய வெற்றி சிக்கலில் அர்ஜெண்டினா தனது கடைசி லீக் ஆட்டத்தில் போலந்து அணியை எதிர்கொண்டது. தொடக்கம் முதலே அனைத்து பிரிவுகளிலும் தாக்குதல் பாணியை தொடங்கிய அர்ஜெண்டினா

ஆட்டத்தின் 74% நேரங்களில் பந்தை தனது கட்டுப்பாட்டில் வைத்து அசத்தியது. முதல் பாதியில் போலந்து அணி தடுப்பாட்டம் மற்றும் அந்த அணியின் கோல் கீப்பர் ஸ்செஜ்யென்சியின் அதிரடியால் அர்ஜெண்டினாவால் கோலடிக்க முடியவில்லை. 2-ஆம் பாதியில் அர்ஜெண்டினா சற்று கூடுதல் வியூகத்துடன் களமிறங்கி 46-வது (அல்லிஸ்டர்) மற்றும் 67-வது (ஆல்வரேஜ்) ஆகியோரின் அசத்தல் கோலால் 2-0 என்ற கணக்கில் அபார வெற்றியுடன் நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெற்றது. போலந்து அணி தோல்விகண்டாலும் புள்ளி போலந்து அணி நாக் அவுட் சுற்றில் வெற்றி பெற்றது.

## கீப்பர் என்றால் இப்படி இருக்க வேண்டும்...

அர்ஜெண்டினா அணி அபார வெற்றி பெற்று நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெற்றது

ஒரு முக்கியமான விசயம் என்றால் அதை விட சுவாரஸ்யமான விஷயம் ஒன்றும் அர்ஜெண்டினா - போலந்து ஆட்டத்தில் நிகழ்ந்தது. அது யாதெனில் தொடக்கம் முதலே களத்தில் பம்பரமாக சுழன்ற அர்ஜெண்டினா அணி ஆட்டத்தின் 3-வது நிமிடத்தின் முதலே கோல் தாக்குதலை நடத்தியது. கிட்டத்தட்ட 20 கோல் ஷாட்களையும், 4 அதிரடி ஷாட்களை தொடுத்தது. இதுபோக கார்னர் என பல கோல் வாய்ப்பு களை உருவாக்கியது அர்ஜெண்டினா. ஆனால் இதையெல்லாம் சுவர் போல தடுத்து அர்ஜெண்டினா அணியை தனி ஒருவராக திணற வைத்தார் போலந்து கோல் கீப்பர் ஸ்செஜ்யென்சி. இந்த ஆட்டத்தில் ஸ்செஜ்யென்சி சொதப்பி இருந்தால் அர்ஜெண்டினா 12 கோல்களுக்கு மேலும் விளாசி இருக்கும். ஆனால் ஒரு துளி வாய்ப்பு கூட வழங்காமல் அர்ஜெண்டினா

வீரர்களை விழிபிதுங்க வைத்தார். இதுபோக மெஸ்ஸியின் பெனால்டி வாய்ப்பையும் தடுத்து மைதானத்தை அதிர வைத்தார். நட்சத்திர கோல் கீப்பர்களில் ஜெர்மனி கோல் கீப்பர் இம்மானுவேலுக்கு அடுத்த இடத்தில் இருக்கும் ஸ்செஜ்யென்சியை கால்பந்து உலகின் சுவர் அழைப்பார்கள். இவர் விளையாடும் ஆட்டங்களில் கோல் அடிப்பது மிகவும் சிரமமான விஷயம் ஆகும். களத்தில் எப்பொழுதும் கூலாக இருக்கும் ஸ்செஜ்யென்சி கிளப் போட்டிகளில் பிரபல அணியான ஜூவெண்டஸ் (இத்தாலி) அணிக்காக விளையாடி வருகிறார்.

## இன்றுடன் லீக் ஆட்டங்கள் நிறைவு

சனியன்று அதிகாலை உடன் லீக் ஆட்டங்கள் நிறைவு பெறுகிறது. 24 மணி நேர இடைவெளி கூட இல்லாமல் சனியன்று இரவே நாக் அவுட் சுற்று

ஆட்டங்கள் தொடங்கு கின்றன.

இக்கட்டான சூழ்நிலையில் அர்ஜெண்டினா அணியின் கோல் கணக்கை துவக்கி வைத்த அல்லிஸ்டர்.

### 28 ஆண்டுகளுக்கு பின் மெக்ஸிகோ அவுட்

கால்பந்து உலகில் முன்களம்தான் முதல் களம். முன்களத்தில் கோலடித்து வெற்றி பெறுவது கால்பந்தின் ஒரு முக்கியமான அம்சம் ஆகும். ஆனால் தடுப்பாட்டம் மூலம் வெற்றியோ அல்லது ஒரு தொடரில் அடுத்த சுற்று வாய்ப்பை பெறுவதோ சாதாரண விஷயம் இல்லை. ஆனால் மெக்ஸிகோ அணி தடுப்பாட்டத்தின் ஒரே திறனால் உலகக்கோப்பை கால்பந்து தொடரில் அபாரமான ஆட்டத்தை வெளிப்படுத்தி வெளிநாக் அவுட், காலிறுதி வரை கம்பீரமாக செல்வது வழக்கம். குறிப்பாக தடுப்பாட்டம் என்றால்

மெக்ஸிகோ நாட்டின் பெயர் தான் முதலில் ஞாபகத்திற்கு வரும் அளவிற்கு மெக்ஸிகோ தடுப்பாட்டத்தில் புகழ்பெற்றது. நடப்பு சீசனிலும் இதே முறையில்தான் களமிறங்கியது. ஆனால் போலந்தின் அபாரமான ஆட்டம் மற்றும் முதல் 2 ஆட்டங்களில் கோலடிக்காமல் கடைசி ஆட்டத்தில் மட்டும் கோலடித்து (கடைசி ஆட்டத்தில் சவூதிக்கு எதிராக 2-1 என்ற கணக்கில் வெற்றி) 22-வது சீசனில் நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெறாமல் சொதப்பியது. உலகக்கோப்பை தொடரில் 28 ஆண்டுகளுக்கு பின் நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெறாமல் நடையை கட்டும் மெக்ஸிகோ கடைசியாக 1978-ஆம் ஆண்டு அர்ஜெண்டினாவில் நடைபெற்ற தொடரில் உலகக்கோப்பையின் குரூப் சுற்றில் மெக்சிகோ வெளியேறியது. அதன் பிறகு உலகக் கோப்பையில் நாக் அவுட், காலிறுதி என கம்பீரமாக வலம் வந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

**இன்றைய ஆட்டங்கள்**

குரூப் “எச்”

போர்ச்சுக்கல் - தென் கொரியா

நேரம் : இரவு 8:30 மணி இடம் : எஜுகேஷன் சிட்டி

குரூப் “எச்”

உருகுவே - கானா

நேரம் : இரவு 8:30 மணி இடம் : அல் ஜனுவப்

குரூப் “ஜி”

செர்பியா - சுவிட்சர்லாந்து

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (சனியன்று அதிகாலை) இடம் : 974

குரூப் “ஜி”

பிரேசில் - கேமரூன்

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (சனியன்று அதிகாலை) இடம் : லுசைல்

சேனல் : ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா (ஓடிடி) இலவசமாக காணலாம்

நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறிய அணிகள்

குரூப் “ஏ” - நெதர்லாந்து, செனகல் குரூப் “பி” - இங்கிலாந்து, அமெரிக்கா குரூப் “சி” - அர்ஜெண்டினா, போலந்து குரூப் “டி” - பிரான்ஸ், ஆஸ்திரேலியா குரூப் “ஜி” - பிரேசில் குரூப் “எச்” - போர்ச்சுக்கல்

மாலை 5 மணி நிலவரப்படி மொத்தம் 10 அணிகள் நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெற்றுள்ளன.

# 27. டிசம்பர் 3, 2022

**இனி கத்தார் மைதானங்களில் அனல் காற்றுதான் இன்று முதல் நாக் அவுட் சுற்றுகள் தொடக்கம்**

லீக் சுற்று ஆட்டங்கள் சனியன்று அதிகாலை நிறைவு பெற்ற நிலையில், சனியன்று இரவே நாக் அவுட் சுற்று ஆட்டங்கள் தொடங்குகிறது. இனி டிரா என்ற பேச்சுக்கு இடமில்லை. 90 நிமிடம் வரை கோலடிக்காமல் சமநிலையில் இருந்தால், கூடுதலாக 30 நிமிடம் (இரண்டு பாதியாக 15x15) கொடுக்கப்படும். கூடுதல் நிமிடங்களும் சமநிலையில் முடிவடைந்தால் நேரடியாக பெனால்டி சூட் அவுட் தான். கத்தார் உலகக்கோப்பை தொடரில் இனி வெற்றி, தோல்வி என்று மட்டுமே ஆட்டங்கள் நிறைவு பெறும்

என்பதால், ஒவ்வொரு ஆட்டமும் அனல் பறக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.

**இன்றைய நாக் அவுட் ஆட்டங்கள்**

நெதர்லாந்து - அமெரிக்கா

நேரம் : இரவு 8:30 மணி இடம் : கலீபா

அர்ஜெண்டினா - ஆஸ்திரேலியா

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (ஞாயிறன்று அதிகாலை) இடம் : அஹமத் பின் அலி

சேனல் : ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா (ஓடிடி) இலவசமாக காணலாம்

**குரூப் சுற்று... ஷார்ட்ஸ்...**

போட்டியை நடத்தும் கத்தார், கனடா ஆகிய அணிகள் குரூப் சுற்றின் மூன்று ஆட்டங்களிலும் தோல்விகண்டு வெளியேறியது. இதில்

சுவாரஸ்யமான விஷயம் என்னவென்றால் உலகக்கோப்பை தொடரின் முதல் ஆட்டத்தில் விளையாடிய கத்தார் முதல் அணியாக வெளி யேறியது என்பதுதான். (கத்தார் அடித்த கோல் 1, வாங்கியது 7) v கருப்புக் குதிரைகள் என வர்ணிக்கப்பட்டு டென்மார்க் வெற்றியை ருசிக்காமல் வெளியேறி யுள்ளது.

தனது முதல் போட்டியில் பலம்வாய்ந்த சாம்பியன் அணியான அர்ஜெண்டினாவை வீழ்த்தி அதிர்ச்சி யளித்தாலும், முதல் சுற்றுடன் வெளியேறியது சவூதி அரேபியா.

முன்னாள் உலகச் சாம்பியன்களான ஜெர்மனி, ஸ்பெயின் அணிகளை வீழ்த்தி குழுச்சாம்பிய னாக அடுத்த சுற்றுக்கு முன்னேறியது நான்கு முறை ஆசிய சாம்பியனான ஜப்பான்.

நான்கு முறை உலகச்சாம்பியனான ஜெர்மனி

தொடர்ந்து 2-வது முறையாக முதல் சுற்றுடன் வெளியேறியுள்ளது.

பலம் பொருந்திய ஈகுவடாரை வீழ்த்தி செனகல் 20 ஆண்டுகளுக்கு பின் அடுத்த சுற்றுக்குத் தகுதி பெற்றது.

ஒரு போட்டியில் அதிக கோல்கள் அடித்த அணி யாக ஸ்பெயின் (கோஸ்டாரிகாவிற்கு எதிராக 7) உள்ளது. (மாலை 5 மணி நிலவரம்)

**நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறிய அணிகள்**

குரூப் “ஏ” நெதர்லாந்து, செனகல் குரூப் “பி” இங்கிலாந்து, அமெரிக்கா குரூப்“சி” அர்ஜெண்டினா, போலந்து குரூப்“டி” பிரான்ஸ், ஆஸ்திரேலியா குரூப் “இ” ஜப்பான், ஸ்பெயின் குரூப்“எப்” மொரோக்கோ, குரோஷியா குரூப் “ஜி” பிரேசில் குரூப் “எச்” போர்ச்சுக்கல் மாலை 5 மணி நிலவரப்படி மொத்தம் 14 அணிகள் நாக் அவுட்

சுற்றுக்கு தகுதி பெற்றுள்ளன.

**4 முறை சாம்பியன் ஜெர்மனி அவுட்**

கால்பந்து உலகில் அதிரடிக்கு பெயர் பெற்ற அணியும், 4 முறை சாம்பியன் அணியான ஜெர்மனி கடந்த முறை போலவே சொதப்பலான ஆட்டத்தால் 22-வது சீசனில் குரூப் சுற்றோடு வெளியேறி அதிர்ச்சி அளித்தது. குரூப் “இ” பிரிவில் இடம்பெற்றிருந்த ஜெர்மனி முதல் ஆட்டத்தில் இளம் அணியான ஜப்பானிடம் 2-1 என்ற கோல்கணக்கில் வீழ்ந்தது. கட்டாய வெற்றி சூழ்நிலையில் தனது 2-வது ஆட்டத்தில் பலமான ஸ்பெயின் அணியிடம் 1-1 என்ற கணக்கில் டிரா செய்தது. நாக் அவுட் சுற்றுக்கு முன்னேற கோஸ்டாரிகா அணியிடம் அதிக கோல் வித்தியாசத்துடன் வெற்றி பெற வேண்டும் என்ற ஒரு சிக்கலுடன், ஜப்பான் அணியை

ஸ்பெயின் அணி வீழ்த்த வேண்டும் என்ற மற்றொரு சிக்கலுடன் வெள்ளியன்று அதிகாலை தனது கடைசி லீக் ஆட்டத்தில் விளையாடி யது ஜெர்மனி. இந்த ஆட்டத்தில் ஜெர்மனி மிக அதிரடியாக விளையாடி 4-2 என்ற கோல் கணக்கில் கோஸ்டாரிகாவை புரட்டியெடுத்தது. கடைசி லீக் ஆட்ட வெற்றியால் ஜெர்மனி நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறும் என்று எதிர்பார்க்கப்பட்ட நிலையில், ஸ்பெயின் அணி 2-1 என்ற கணக்கில் ஜப்பானிடம் தோல்வியை தழுவ ஜெர்மனியின் நாக் அவுட் சுற்று கானல் நீரைப் போன்று காணாமல் போனது. கடந்த சீசனில் மூன்றாவது இடத்தைப் பிடித்த பெல்ஜியம் அணியும் நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**வெற்றியின் ரகசியம் - 6**

- 100 மீ ஓட்டப்பந்தயம் போல பந்திற்காக

பறப்பது. சில சமயம் மொரோக்கோ வீரர்கள் பந்துடனும் பறக்கிறார்கள்

- பலம் வாய்ந்த அணியோ பலம் குறைந்த அணியோ யாராக இருந்தால் என்ன? மோதிதான் பார்ப்போமே என்று முரட்டுத் தனமாக விளையாடுவது m பிரேசில் போல முன்களம், பின்களம் என இரண்டிலும் தாக்குதல் பாணி

- முக்கியமாக அணி வீரர்கள் பயிற்சியாளரின் சைகை மொழிகளை அப்படியே உள்வாங்கி கும்கி யானைகள் போல தாக்குதல் நடத்துவது (கும்கி யானைகள் மாவூத்தின் கட்டளைகளுக்கு ஏற்ப வேலைகள், உணவு அருந்துதல், காட்டு யானைகளை தாக்கும்) m அணி வீரர்கள் ஒற்றுமையாய் இருப்பது

மிகப்பெரிய பிளஸ் பாயிண்ட் ஆகும்.

- இப்படி பல விஷயங்களுடன் மொரோக்கோ அணி நடப்பு சீசன் உலகக்கோப்பை தொடரில் சக்தி வாய்ந்த அணியாக உருவெடுத்துள்ளது.

**கத்தாரை கதி கலங்க வைக்கும் மொரோக்கோ**

உலக நாடுகளின் பட்டியலில் மொரோக்கோ என்ற சொல் அதிகம் உச்சரிக்கப்படாது. புரியும்படி சொன்னால் மொரோக்கோ என்ற நாடு இருப்பது சிலருக்கு தெரியாது. மொரோக்கோ நாடு பற்றி கேள்வி கேட்டால் ஆப்பிரிக்கா கண்டத்தில் எங்கேயோ இருக்கிறது என்று ஒரு சிலர் பதில் தரலாம். ஆனால் உலகின் முதன்மை யான விளையாட்டுத் திருவிழாவான உலகக்கோப்பை கால்பந்து தொடரின் 22-வது சீசனில் வடக்கு ஆப்பிரிக்க நாடான மொரோக்கோ டாப்

டிரெண்டிங்கில் உள்ளது. காரணம் குரூப் “எப்” பிரிவில் கடந்த உலகக்கோப்பையில் 2-வது இடம் பிடித்த குரோசியா (டிரா), மூன்றாம் இடம் பிடித்த பெல்ஜியம் (வெற்றி) அணிகளை ஒரு புரட்டு புரட்டியெடுத்தது மட்டுமல்லா மல், இளம் அணியான கனடாவை பந்தாடியது. இவ்வாறு தோல்வியை சந்திக்காமல் குரூப் சாம்பியன் அந்த ஸ்தில் நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறி கத்தார் உலகக்கோப்பை தொடரை கதி கலங்க வைத்துள்ளது மொரோக்கோ.

# 28. டிசம்பர் 4, 2022

## பிரேசிலுக்கு அதிர்ச்சி அளித்த கேமரூன்

கத்தார் உலகக்கோப்பையை வெல்லும் என கணிக்கப்படும் அணி களில் ஒன்றான பிரேசில் அணி (குரூப் “ஜி”) தனது கடைசி லீக் ஆட்டத்தில் இளம் ஆப்பிரிக்க அணியான கேமரூனை எதிர்கொண் டது. ஏற்கெனவே நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெற்றுவிட்ட நிலையில், கேம ரூன் அணிக்கெதிரான ஆட்டத்தில் பிரேசில் அணி 2-ஆம் தர (சில வீரர்களுக்கு ஓய்வு) அணியாக களமிறங்கியது. ஆட்டத்தின் கடைசி நிமிடம் வரை (90-வது) இரு அணிகளும் கோலடிக்கவில்லை. கூடுதலாக வழங்கப் பட்ட உதிரி நேரத்தின் 2-வது நிமிடத்தில் கேமரூன் வீரர் வின்சென்ட் கோலடிக்க பிரேசில் அணி அதிர்ச்சியில் உறைந்தது.

பதி லுக்கு கோலடிக்க பிரேசில் இறுதிக்கட்ட போராட்டம் நடத்தியது. எனினும் கேமரூன் அணி தடுப்பாட்டத்தில் சுவர் அமைக்க, இறுதியில் 1-0 என்ற கோல் கணக்கில் 5 முறை சாம்பியன் அணியான பிரேசிலை வீழ்த்தி வர லாற்று வெற்றியுடன் லீக் சுற்றோடு வெளியேறியது கேமரூன்.

**இன்றைய ஆட்டங்கள்**

(நாக் அவுட்) பிரான்ஸ் - போலந்து நேரம் : இரவு 8:30 மணி இடம் : அல் துமாமா

இங்கிலாந்து - செனகல் நேரம் : நள்ளிரவு 12:30 மணி (திங்களன்று அதிகாலை) இடம் : அல் பாயித்

**கொண்டாட்டத்திற்கு ரெட் கார்டு...**

பிரேசில் அணிக்கெதிரான ஆட்டத்தில் வரலாற்று வெற்றிக்கான கோலை அடித்த

கேமரூனின் கேப்டன் வின்சன்ட் (90+2), விதிகளை மீறி ஜெர்சியை கழற்றி வெற்றியை கொண்டாடியதால் (90+3 வது நிமிடத்தில்) ரெட் கார்டு (சிவப்பு அட்டை) பெற்றார். அதாவது அதிரடி கோலுக்கான சந்தோசம் ஒரு நிமிடம் கூட நீடிக்கவில்லை. ரெட் கார்டு வழங்கப்பட்டாலும் நடுவரின் முடிவை புன்னகை மற்றும் மரியாதையுடன் ஏற்று களத்திலிருந்து விடை பெற்றார்.

**இவர்கள்தான் ரசிகர்கள்...**

தனது நாட்டிற்கு நாக் அவுட் சுற்றுக்கு வாய்ப்பு இல்லை என்று தெரிந்த பொழுதிலும் “கடைசி ஆட்டத்தில் வெற்றியோடு விடை பெறுவோம்”, “சாம்பியன் பிரேசிலை வீழ்த்துவோம்” என்ற முழக்கங்களோடு ட்ரம்ஸ் இசையுடன் கேமரூன் ரசிகர்கள் இருக்கையில் அமராமல் தொடர்

ஆதரவளித்தனர். வின்சன்ட் வெற்றி கோலின் பொழுது கேமரூன் ரசிகர்களின் ஆர்ப்பரிப்பால் லுசைல் நகரமே குலுங்கியது. ஆனால் பிரேசில் ரசிகர்கள் “நாங்கள் நாக் அவுட்டுக்கு சென்றுவிட்டோம்” என பொழுது போக்கிற்காக இருக்கையில் அமர்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

## உருகுவே அணிக்கு இது தேவையில்லாதது

குரூப் “எச்” பிரிவில் 2 முறை சாம்பியனான உருகுவே அணி தனது கடைசி லீக் ஆட்டத்தில் கானா அணியை வீழ்த்தினாலும், போது மான கோல் புள்ளிகள் இல்லாததால் கத்தார் உலகக்கோப்பை தொடரில் பரி தாபமாக வெளியேறியது. ஆட்டம் முடிந்தவுடன் பெனால்டி பிரச்சனைக்கு நியாயம் கேட்க கள நடுவர் டேனியல் சீபர்ட்டை (ஜெர்மனி) உருகுவே சுற்றி

வளைத்தனர். ஆனால் டேனியல் எவ் வித பதிலும் அளிக்காமல் மைதானத்திலி ருந்து வெளியேற முயற்சித்தார். ஆனா லும் உருகுவே வீரர்கள் விடாமல் துரத்தி னர். பொதுவாக கால்பந்து விளையாட் டின் விதிகளின் படி களத்திலேயே (கள) நடுவரிடம் வாக்குவாதம் செய்ய முடி யாது. ரெட் கார்டு கொடுத்துவிடுவார் வெளியே அனுப்பி விடுவார். ஆனால் போட்டி முடிந்த பொழுது கள நடுவரை வசைபாடுவது மிகப்பெரிய பின்விளை வை ஏற்படுத்தும். ஒரு போட்டியில் அல் லது ஒரு தொடரில் போதுமான ஆட்டங்க ளில் சம்மந்தப்பட்ட வீரர்களோ அல்லது அணிகளையோ சஸ்பெண்ட் செய்யும் அளவிற்கு நடவடிக்கை கூட பாயலாம். உருகுவே அணி உலகின் முதன்மை யான தொடரில் இப்படி ஒழுங்கீனமான செயலில் ஈடுபட்டுள்ள நிலையில், சர்வ தேச கால்பந்து சம்மேளனம் (பிபா) இந்த

விவகாரத்தில் எப்படி நடவடிக்கை எடுக்கிறது என்று பார்ப்போம். குரூப் “எச்” பிரிவில் தென் கொரியா, உருகுவே ஆகிய அணிகள் 4 புள்ளிகளு டன் சரிசமமாக இருந்த நிலையில், கோல் கள் அடிப்படையில் தென்கொரியா (4), உருகுவேயை (2) பின்னுக்குத்தள்ளி நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறியது. இந்த பிரிவில் ரொனால்டோவின் போர்ச் சுக்கல் அணி முதல் அணியாக நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறியது. போர்ச்சுக்கல் அணி தனது கடைசி லீக் ஆட்டத்தில் இளம் அணியான தென் கொரியாவை வீழ்த்தியது.

**நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறிய அணிகள்**

குரூப் “ஏ” - நெதர்லாந்து, செனகல் குரூப் “பி” - இங்கிலாந்து, அமெரிக்கா குரூப் “சி” - அர்ஜென்டினா, போலந்து குரூப் “டி” - பிரான்ஸ், ஆஸ்திரேலியா குரூப் “இ” - ஜப்பான், ஸ்பெயின்

குரூப் “எப்” - மொராக்கோ, குரோஷியா குரூப் “ஜி” - பிரேசில், சுவிட்சர்லாந்து குரூப் “எச்” - போர்ச்சுக்கல், தென்கொரியா

கடைசி கட்ட லீக் ஆட்டங்களில் தென்கொரியா, சுவிட்சர்லாந்து அணிகள் நாக் அவுட் சுற்றுக்கு தகுதி பெற்றன.

# 29. டிசம்பர் 5, 2022

## காலிறுதியில் அர்ஜெண்டினா

கத்தார் உலகக்கோப்பை தொடரில் லீக் சுற்று நிறை வடைந்து நாக் அவுட் சுற்று ஆட்டங்கள் நடைபெறுவரும் நிலையில், முதல் நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் (சனியன்று இரவு 8:30 மணிக்கு) நெதர்லாந்து அணி அமெரிக்காவை 3-1 என்ற கோல் கணக்கில் வீழ்த்தி முதல் அணியாக காலி றுதிக்கு முன்னேறியது. ஞாயிறன்று அதிகாலை நடைபெற்ற 2-வது நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் கோப்பை வெல்லும் அணிகளில் ஒன்றான அர்ஜெண்டினா - ஆஸ்திரேலியாவை எதிர்கொண்டது. கடந்த கால சொதப்பல்களை கணக்கில் கொண்டு தொடக்கம் முதலே தாக்குதல் பாணி ஆட்டத்தை தொடங்கியது அர்ஜெண்டினா.

ஆனால் ஆஸ்திரேலிய அணி தடுப்பு சுவர் அமைத்து மிக பலமான அளவில் தடுப்பாட்டத்தை கையிலெடுத்து அர்ஜெண்டினாவை மிரட்டியது. 35-வது நிமிடத்தில் கால்பந்து உலகின் நட்சத்திர வீரரும், அர்ஜெண்டினா அணியின் கேப்டனுமான

மெஸ்ஸி ஆஸ்திரேலியாவின் சுவரை நொறுக்கி சூப்பர் ஷாட் மூலம் கோலடித்தார். இதன் பிறகு ஆஸ்திரேலியா தடுப்பாட்டத்தை சுருக்கி கோலடிக்கும் முனைப்பில் களமிறங்கியது. 57-வது நிமிடத்தில் அர்ஜெண்டினாவின் டி பவுல் ஆஸ்தி ரேலியா கோல் கீப்பரை கணித்து புத்திசாலிதனமாக பந்தை பறிக்க முயன்றார். ஆனால் டி பவுலிடம் சிக்கா மல் பந்து வேறு பக்கம் நகர்ந்தது. இதனை சாதகமாக பயன்படுத்திக்கொண்ட அர்ஜெண்டினா வீரர் அல்வரேஜ் பின்புறமாக பந்தை திருப்புவது போன்று ஏமாற்றி கோலடித்து அசத்தினார். அதன்

பிறகு இரு அணிகளின் அதிரடி ஆட்டங்களால் அஹமத் பின் அலி மைதானத்தில் அனல் காற்று வீசியது. 77-வது நிமிடத்தில் ஆஸ்திரேலிய வீரர் குட்வின் கோல் போஸ்ட் நோக்கி உதைத்த பந்தை அர்ஜெண்டினா வீரர் பெர்னாண்டஸ் தடுக்கச் சென்று அவரே ஒன் சைட் கோலாக அடித்து ஆஸ்திரேலியாவிற்கு ஒரு கோலை வாரி வழங்கினார். அதன் பிறகு பல்வேறு வகையில் முயற்சி செய்தும் ஆஸ்திரேலியாவால் பதிலுக்கு கோலடிக்க முடியவில்லை. இறுதியில் அர்ஜெண்டினா அணி 2-1 என்ற கோல் கணக்கில் அபார வெற்றி பெற்று காலிறுதிக்கு முன்னேறியது.

**மெஸ்ஸி 1000**

ஆஸ்திரேலியாவிற்கு எதிரான நாக் அவுட் சுற்று போட்டி கால்பந்து உலகின்

நட்சத்திர வீரரும், அர்ஜெண்டினா அணியின் கேப்டனுமான மெஸ்ஸிக்கு 1,000-வது போட்டியாகும் (கிளப்,சர்வதேச போட்டி சேர்த்து). 1000-வது போட்டியில் கோலடித்ததன் மூலம் மெஸ்ஸி கால்பந்து உலகில் மொத்தம் 789 கோல்களை அசத்தியுள்ளார். இதுவரை 5 உலகக்கோப்பையில் விளையாடியுள்ள மெஸ்ஸி நாக் அவுட் சுற்றில் அடித்த முதல் கோல் இதுவாகும் (ஆஸ்திரேலியாவிற்கு எதிராக). மேலும் உலகக்கோப்பை தொடரில் அடித்த கோல்களின் எண்ணிக்கை 9-ஆக அதிகரித்த நிலையில், அர்ஜெண்டினா கால்பந்து ஜாம்பவான் டியகோ மாரடோனாவின் உலகக்கோப்பை தொடர் (8 கோல்) சசாதனையை முறியடித்து வரலாறு படைத்தார். இதுபோக 1000-வது போட்டியில் மெஸ்ஸி சிறந்த ஆட்ட நாயகனுக்கான விருதையும் வென்றார்.

**யுத்தக் களமாக மாற்றிய ஆஸ்திரேலிய**

## வீரர்கள்

அர்ஜெண்டினா அணிக்கெதிரான நாக் அவுட் ஆட்டத்தில் ஆஸ்திரேலிய வீரர்கள் கோலடிப்பது, பந்தை பறிப்பது போன்ற செயல்களை விட அர்ஜெண்டினா வீரர்கள் மீது தனிநபர் தாக்குதலை அதிகமாக நடத்தினர். பயிற்சியாளரின் ஸ்கோலனியின் உத்தரவுக்கு ஏற்ப ஆஸ்திரேலிய வீரர்களின் தாக்குதலை கண்டுகொள்ளாமல் அர்ஜெண்டினா அணி வீரர்கள் ஆட்டத்தில் மீது மட்டுமே கவனம் செலுத்தினர். எனினும் ஆட்டத்தின் நடுப்பகுதியில் பந்தை பறிக்க அர்ஜெண்டினா கேப்டன் மெஸ்ஸியின் ஜெர்சியை ஆஸ்திரேலிய வீரர் பெக்கிச் பிடித்து இழுத்தார். பதிலுக்கு மெஸ்ஸியும் மோதலுக்கு தயாராக மைதானம் பரபரப்பில் உறைந்தது. நடுவர்கள் சகவீரர்கள் சமாதானப்படுத்த தொடர்ந்து போட்டி நடைபெற்றது.

**இன்றைய நாக் அவுட் ஆட்டங்கள்**

ஜப்பான் - குரோஷியா

நேரம் : இரவு 8:30 மணி இடம்: அல் ஜனுவப்

**யாருக்கு வாய்ப்பு?**

இந்த ஆட்டத்தில் பலம், அனுபவம் அடிப்படையில் குரோஷியா அணி வெற்றி பெற அதிக வாய்ப்புள்ளது என்றாலும், லீக் ஆட்டங்களில் மிரட்டலான ஆட்டத்தை வெளிப்படுத்திய குரூப் சாம்பியனான ஜப்பானை குரோஷியா சற்று கவனமாக எதிர்கொண்டால்தான் காலிறுதி வாய்ப்பு. அசால்ட்டாக நினைத்தால் குரோஷியா நாக் அவுட் தான்.

பிரேசில் - தென் கொரியா

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (செவ்வாயன்று அதிகாலை)

இடம் : 974

**யாருக்கு வாய்ப்பு?**

இந்த ஆட்டத்தில் பிரேசில் அணி எளிதாக வெல்லும் என எதிர்பார்க்கப்படுகிறது. எதிர்பார்ப்பு ஒரு பக்கம் இருந்தாலும் கணிக்க முடியாத இளம் அணியான தென் கொரியாவை கவனமாக எதிர்கொண்டால் மட்டும் பிரேசில் அணியின் கோப்பை கனவிற்கு பாதை (காலிறுதி) கிடைக்கும்.

**கால்பந்து உலகில் பிரபலமாகும் ஜப்பான்...**

ஆசிய சாம்பியனான ஜப்பான் அணி, கத்தார் உலகக்கோப்பை சீசனில் 2 செயல்கள் மூலம் கால்பந்து உலகில் பிரபலமான அணியாக வளர்ந்துள்ளது.

1. வீரர்கள்: எவ்வித வரலாற்று பின்புலம் இன்றி 22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து

தொடரின் குரூப் “இ” பிரிவில் சாம்பியன் அணிகளான ஸ்பெயின், ஜெர்மனி ஆகிய அணிகளை பந்தாடி குரூப் சாம்பியன் அந்தஸ்துடன் நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறி அசத்தியுள்ளது.

2. ரசிகர்கள்: ஜப்பான் அணியின் ஆட்டங்களை கண்டு ரசிக்க வரும் அந்நாட்டு ரசிகர்கள் போட்டி முடிந்த பின்பு மைதானத்தில் கிடக்கும் குப்பைகளை தங்களது கைகளால் எடுத்து சுத்தம் செய்கின்றனர். அது தங்கள் நாட்டு ரசிகர்களின் குப்பை யாக இருந்தாலும் சரி, மற்ற நாட்டு ரசிகர்களின் குப்பையாக இருந்தால் என்ன? என்ற வேறுபாடு இல்லாமல் குப்பை - குப்பை தானே என்ற சொற்றோடரின் படி குப்பையை அகற்றி செல்கின்றனர்.

**வெற்றியோ, தோல்வியோ சுத்தம் செய்துவிட்டு தான் நகருவோம்...**

பொதுவாக மற்ற விளையாட்டு ரசிகர்களை விட கால்பந்து ரசிர்கர்கள் அதிகம் உணர்ச்சிவசப்பட்டு இருப்பார்கள். வெற்றி பெற்றால் அதிகம் கொண்டாடு வார்கள். தோற்றால் மைதானத்தை நொறுக்க கூட தயங்க மாட்டார்கள். இது கால்பந்து ரசிர்கர்களின் 80% குணநலன். ஆனால் ஜப்பான் ரசிகர்கள் இதற்கு நேர் மாறாக உள்ள னர். தனது அணி வெற்றி அடைந்தாலும் சரி, தோல்வி அடைந்தாலும் சரி குப்பையை அகற்றிவிட்டுதான் செல் கிறார்கள். எடுத்துக்காட்டாக குரூப் சுற்றின் 3 ஆட்டங்களி லும் ஜப்பான் ரசிகர்கள் குப்பையை எடுத்துச் சென்றார்கள். குரூப் சுற்றின் 3 ஆட்டங்களில் ஜப்பான் அணி ஸ்பெயின், ஜெர்மனி அணியை வீழ்த்தியது. கோஸ்டாரிகா அணியிடம் வீழ்ந்தது

# 30. டிசம்பர் 6, 2022

**இங்கிலாந்து அபாரம்**

திங்களன்று அதிகாலை நடைபெற்ற 4-வது நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் இளம் அணியான செனகலை பலமான இங்கிலாந்து அணி எதிர்கொண்டது. இளம் கன்று பயமறியாது என்பது போல ஆட்டத்தின் முதல் 35 நிமிடங்களில் செனகல் அணி முன்களத்தில் கடும் தாக்குதல் நடத்தியது. இங்கிலாந்து கோல் கீப்பர் பிக்போர்டின் அபார ஆட்டத்தால் செனகல் அணியின் தாக்குதல் தவிடு பொடியானது. அடுத்த சில நிமிடங்களில் கேப்டன் ஹாரி ஏதோ ஒரு உத்தரவை பிறப்பிக்க இங்கிலாந்து வீரர்கள் முன்கள தாக்குதலை ஆரம்பித்தனர். தாக்குதல் ஆட்டத்தின் ஒவ்வொரு நகர்வும் அனல் பறந்த

நிலையில், இங்கிலாந்து வீரர் ஹெண்டர்சன் 38-வது நிமிடத்தில் கோலடித்தார். முதல் பாதியின் உதிரி நிமிடங்களில் (45+3’) இங்கிலாந்து அணியின் கேப்டன் ஹாரி அதிரடி கோலடிக்க 2002 கனவில் இருந்த செனகல் அதிர்ச்சியில் உறைந்தது. இரண்டாம் பாதியின் 57-வது நிமிடத்தில் இங்கிலாந்து வீரர் சாகா தந்திரமாக கோலடிக்க செனகல் வீரர்கள் சற்று சோர்ந்தனர். அடுத்து 70-வது நிமிடத்திற்கு பிறகு செனகல் அணி மீண்டும் தாக்குதல் மூலம் கோலடிக்க முயற்சி செய்தது. ஆனால் எவ்வித பலனும் கிடைக்கவில்லை. இறுதியில் இங்கிலாந்து அணி 3-0 என்ற கோல் கணக்கில் அபார வெற்றி பெற்று காலிறுதிக்கு முன்னேறியது.

**காலிறுதிக்கு தகுதி பெற்ற அணிகள்’**

நெதர்லாந்து, அர்ஜெண்டினா, பிரான்ஸ்,

இங்கிலாந்து நாக் அவுட் ஆன அணிகள் அமெரிக்கா, ஆஸ்திரேலியா, போலந்து, செனகல் இன்றுடன் நாக் அவுட் நிறைவு

தொடக்கம் முதலே பரபரப்பாக நகர்ந்து வரும் 22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து தொடரில் செவ்வாயன்று (கடைசி நாக் அவுட் ஆட்டம் புதன்கிழமை விடிவதற்குள் முடிந்துவிடும்) நாக் அவுட் சுற்று ஆட்டங்கள் நிறைவு பெறுகிறது. அதன் பின் டிசம்பர் 9-ஆம் தேதி காலிறுதி ஆட்டங்கள் தொடங்குகிறது.

## இதுவரை 2 ரெட் கார்டுகள் மட்டுமே

கத்தார் உலகக்கோப்பை சீனில் நாக் அவுட் சுற்றுகள் இறுதிக்கட்டத்தை எட்டியுள்ள நிலையில், இதுவரை 2 ரெட் கார்டுகள் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளன. லீக் ஆட்டங்களில் வேல்ஸ் கீப்பர் வெயின் மற்றும் கோலடித்த மகிழ்ச்சியில்

ஜெர்சியை கழற்றிய கேமரூன் வீரர் வின்சன்ட் ஆகியோர் ரெட் கார்டு பெற்று மைதானத்தை விட்டு வெளியேறினர். இதுபோக 2 மஞ்சள் அட்டை பெற்று ஒரு போட்டியில் பெஞ்சில் அமர்ந்தவர்களும் கணக்கில்லாமல் உள்ளனர்.

இங்கிலாந்து அணி தனது காலிறுதி ஆட்டத்தில் நடப்பு சாம்பியனான பிரான்ஸ் அணியை எதிர்கொள்கிறது. பிரான்ஸ் அணி தனது நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் போலந்து அணியை 3-1 என்ற கணக்கில் வீழ்த்தியது.

**அனைவருக்கும் கல்வி வேண்டும்...**

ஒரே ஒரு பேண்ட் மூலம் கவனம் ஈர்த்த மெஸ்ஸி...

கால்பந்து உலகின் நட்சத் திர வீரரும், அதிக ரசிகர் களை கொண்ட வீரருமான மெஸ்ஸி 22-வது சீசன் உலகக்கோப்பை தொடரில் அர்ஜெண்டினா

அணியை திறம்பட வழி நடத்தி வருகிறார். கடந்த கால உலகக் கோப்பை போன்று அல்லாமல் நடப்பு சீச னில் சற்று சூப்பர் பார்மில் அதிரடி கோல் களுடன் அமர்க்களப்படுத்தி வருகிறார் மெஸ்ஸி. மெஸ்ஸியின் கேப்டன்ஷிப் மற்றும் தந்திரமான கோல்களின் உதவி யால் அர்ஜெண்டினா அணி காலிறு திக்கு முன்னேறி அசத்தியுள்ளது. இந்நிலையில் ஆஸ்திரேலியா அணிக்கெதிரான நாக் அவுட் சுற்று ஆட் டத்தில் அர்ஜென்டினா அணி 2-1 என்ற கோல் கணக்கில் வெற்றி பெற்று காலிறு திக்கு முன்னேறியது. இந்த ஆட்டத்தில் மெஸ்ஸி EDUCATION FOR ALL (அனை வருக்கும் கல்வி வேண்டும்) என்ற பேண்டை அணிந்து (கேப்டன் பேண்ட்) விளையாடினார். மெஸ்ஸியின் இந்த செயலுக்கு உலகம் முழுவதும் பாராட்டு கள் குவிந்து வருகிறது. நாடு, விளையாட்டு, அரசியல் என எவ்வித பாகுபாடின்றி மெஸ்ஸியின்

கல்விக்கான “சேவை தகவல்” திறனை பாராட்டி வாழ்த்துக்கள், மீம்ஸ்கள் என பல்வேறு சிறப்பு அம்சங்களுடன் மெஸ்ஸி சமூக வலைத்தளங்களில் டாப் டிரெண்டிங்கில் உள்ளார்.

**இன்றைய நாக் அவுட் ஆட்டங்கள்**

மொரோக்கோ - ஸ்பெயின்

நேரம் : இரவு 8:30 மணி இடம் : எஜூகேஷன் சிட்டி

இரு அணிகளின் பொதுவான பலம், பலவீனம் அடிப்படையில் கணித்தால் ஸ்பெயின் அணி எளிதாக காலிறுதிக்கு முன்னேறும் என எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் நடப்பு உலகக்கோப்பை சீசனில் கணிக்க முடியாத அணியாக இருக்கும் மொரோக்கோ குரூப் (எப்) சாம்பியன் அந்தஸ்தில் நாக் அவுட் சுற்றுக்கு முன்னே றிய அனுபவத்தில் உள்ளது. இதனால்

ஸ்பெயின் அணி கவனமாக விளையாடி னால்தான் காலிறுதிக்குச் செல்ல முடியும். லீக் ஆட்டங்களை போல மொரோக்கோ அதிரடியாக விளையாடினால் அந்த அணிக் கும் காலிறுதி வாய்ப்பு 65% உள்ளது.

போர்ச்சுக்கல் - சுவிட்சர்லாந்து

நேரம்: நள்ளிரவு 12:30 மணி இடம் : லுஸைல்

இந்த ஆட்டத்தில் யாருக்கு வெற்றி, தோல்வி என உறுதியாக கூற முடியாது. எனினும் பலம், பார்ம், கால்பந்து உலகின் நட்சத்திர வீரர் ரொனால்டோவின் கேப்டன்ஷிப் ஆகியவற்றை கணக்கிடும் பொழுது போர்ச்சுக்கல் அணிக்கு காலிறுதி வாய்ப்பு பிரகாசமாக உள்ளது. நிதான ஆட்டத்திற்கு பெயர் பெற்ற சுவிட்சர்லாந்து அணி கடும் போராட்டத்தால் நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறியது என்பதால் அந்த அணியை

ஜாக்கிரதையாக எதிர் கொண்டால் போர்ச்சுக்கல் நாக் அவுட் ஆகாமல் காலிறுதிக்கு முன்னேறலாம்.

# 31. டிசம்பர் 7, 2022

### 2 நாட்கள் விடுமுறை

பரபரப்பாக நகர்ந்து வரும் 22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து தொடர் நடுகட்டத்தை தாண்டியுள்ளது. வெள்ளியன்று காலிறுதி ஆட்டங்கள் தொடங்க உள்ள நிலையில், நாக் அவுட் சுற்று விளையாடிய களைப்பை போக்க புதன், வியாழன் என 2 நாட்கள் ஓய்வு அளிக்கப்பட்டுள்ளது.

### தென்கொரியாவை புரட்டியெடுத்த

நாக் அவுட் சுற்றின் 6-வது ஆட்டத்தில் கோப்பை வெல்லும் அணிகளில் ஒன்றான பிரேசில் அணி கணிக்க முடியாத ஆசிய சாம்பியன் அணியான தென் கொரி யாவை எதிர்கொண்டது. கத்தார்

சீசனில் தென் கொரியா வின் வரலாற்றை நன்கு கணித்த பிரேசில் அணி ஆட்டத்தின் 4-வது நிமிடத்தின் முதலே கோல் தாக்குதலில் ஈடுபட்டது. இதன் பலனாக 7-வது நிமிடத்தில் பிரேசில் வீரர் வினி கோல் கணக்கை துவக்கி வைத்தார். தொடர்ந்து 13-வது நிமிடத்தில் கிடைத்த பெனால்டி வாய்ப்பில் பிரேசில் கேப்டன் நெய்மார் கோல டிக்க, அடுத்த 16 நிமிட இடைவெளியில் கத்தார் உலகக்கோப்பையின் அதி ரடி மன்னன் என வர்ணிக்கப்படும் பிரேசில் முன்கள வீரர் ரிச்சர்லிசன் (29-வது நிமிடம்) தந்திரமாக கோலடித்தார். 36-வது நிமிடத்தில் லுகாஸ் மேலும் ஒரு கோலடிக்க முதல் பாதி முடிவடைவதற்குள் தென் கொரியா அணியை 4-0 என்ற கணக்கில் புரட்டியெடுத்தது பிரேசில். ஏறக்குறைய வெற்றி பெற்றுவிட்டோம் என்ற எண்ணத்தில் இரண்டாம் பாதியில் தாக்குதலை குறைத்து,

முன்னணி வீரர்களுக்கு ஓய்வு அளித்து இளம் வீரர்களை களமிறக்கியது பயிற்சி ஆட்டம் போல விளையாடியது பிரேசில். ஆட்டத்தின் 76-வது நிமிடத்தில் தென் கொரியா வீரர் சீயுங் மிரட்ட லான வேகத்தில் அதிரடி கோலடித்தார். இந்த கோல் கார்னர் பகுதியில் இருந்து மிகுந்த தொலைவில் அடிக்கப்பட்ட பிரம்மாண்ட கோலாகும். அதன்பின் பிரேசில் அணியின் தடுப்பு அரணை தாண்டி தென்கொரி யாவால் கோலடிக்க முடியவில்லை. 22-வது சீசனில் புதிய வரலாறு படைக்கும் என எதிர்பார்க்கப் பட்ட தென்கொரியா அணி பிரேசிலை தாக்குப்பிடிக்க முடியாமல் பரிதாபமாக வெளியேறியது.

**கவலைக்கிடமான நிலையில் பீலே... வெற்றியை சமர்ப்பித்த பிரேசில் வீரர்கள்...**

தென்அமெரிக்க நாடான பிரேசிலுக்கு 3

முறை (1958, 1962, 1970) உலகக்கோப்பையை பெற்றுத் தந்த கால்பந்து ஜாம்பவான் பீலே (வயது 82) வயது முதிர்ச்சி காரணமாக பல்வேறு உடல் பிரச்சனைகளால் பிரேசிலின் சாவ் பாலோ நகரில் உள்ள மருத்துவமனையில் கவலைக்கிடமான நிலையில் உள்ளார். இதில் கொரோனாவும் பாதிக்கப்பட்டுள்ளதால் பீலே தீவிர மருத்துவ கண்காணிப்பில் உள்ள நிலையில், கத்தார் உலகக்கோப்பை சீசனில் காலிறுதி முன்னேற்ற வெற்றியை பீலேவுக்கு சமர்ப்பித்தனர் பிரேசில் வீரர்கள்.

**காலிறுதி ஆட்டங்கள்** குரோஷியா - பிரேசில் நாள் : டிசம்பர் 9-ஆம் தேதி _ I *அர்ஜெண்டினா - நெதர்லாந்து நாள் : டிசம்பர் 10-ஆம் தேதி* I _- இங்கிலாந்து - பிரான்ஸ் நாள் : டிசம்பர் 11-ஆம் தேதி (செவ்வாயன்று மாலை 5 மணி நிலவரம்)

## கத்தாரில் முதல் பெனால்டி சூட் அவுட்

22-வது சீசன் தொடரில் 5-வது நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் குரோஷியா - ஜப்பான் அணிகள் மோதின. தொடக்கம் முதலே பர பரப்பாக நடைபெற்ற இந்த ஆட்டத்தில் கடைசி நேரம் (90-வது நிமிடம்) வரை இரு அணிகளும் 1-1 என்ற கோல் கணக்கில் சமனில் இருந்த தால் கூடுதல் நேரம் வழங்கப்பட்டது. கூடுதல் நேரத்திலும் இரு அணிகளும் கோலடிக்காத தால் பெனால்டி சூட் அவுட் முறை கடை பிடிக்கப்பட்டது. களத்தில் (120 நிமிட) மோதும் பரபரப்பு ஆட்டத்தை பெனால்டி சூட் அவுட் மிஞ்சியது. மிக பரபரப்பாக நடைபெற்ற பெனால்டி சூட் அவுட்டில் 3-1 என்ற கணக்கில் குரோஷியா அபார வெற்றி பெற்று காலி றுதிக்கு முன்னேறியது. 22-வது சீசன் வரலாற் றில் கூடுதல் நேரம், பெனால்டி சூட் அவுட் கடைப்பிடிக்கப்பட்ட ஆட்டம் குரோசியா - ஜப்பான் ஆட்டமாகும்.

**ரத்தம் கொதிக்கும் தருணத்தில் அசால்ட்டாக கலக்கிய லிவாகோவிச்**

பெனால்டி சூட் அவுட் என்பது மிகவும் பதற்றமானது. கால்பந்து உலகில் எந்த காலகட்டத்திலும் சிறப்பாக செயல்படலாமே தவிர பெனால்டி சூட் அவுட்டில் செயல்படுவது அவ்வளவு சாதாரண விஷயம் அல்ல. புரியும்படி சொன்னால் பெனால்டி சூட்டில் இரு அணி வீரர்களும் கை, கால்களில் நடுக்கம் ஏற்படும் அளவிற்கு இருப்பார்கள். இதில் முக்கிய காரணிகளாக இருக்கும் கோல் கீப்பர்கள் அதிக ரத்த கொதிப்பு டன் இருப்பார்கள். இவ்வளவு இக்கட்டான சூழ்நிலையில்தான் குரோ ஷிய கோல் கீப்பர் லிவாகோவிச் அசத்தலாக செயல்பட்டு குரோஷியா வை காலிறுதிக்கு கரையேற்றினார். ஜப்பானின் முதல் 2 பெனால்டி வாய்ப்புகளை அபாரமாக தடுத்தார். 3-வது வாய்ப்பை மட்டும்

கோட்டை விட்ட லிவாகோவிச், அதற்கு பரிகாரமாக 4-வது பெனால்டியையும் தடுத்து குரோஷியா காலிறுதிக்கு தகுதி பெற முக்கிய காரணமாக இருந்தார்.

**விடை பெற்றது ஆசியா...**

கத்தார் உலகக்கோப்பை சீசனில் ஆசி யக்கண்டத்தில் இருந்து 6 அணிகள் பங் கேற்றது. போட்டியை நடத்தும் அடிப்படை யில் கத்தார் நாடும், ஜப்பான், தென் கொரியா, சவூதி அரேபியா, ஈரான், ஆஸ்திரேலியா (உலகக்கோப்பையில் மட்டும் ஆசிய கண்டம்) என 6 அணிகள் களமிறங்கின. கால்பந்து பின்புலம் இல்லாத கத்தாரை தவிர மற்ற நாடுகள் அபாரமாக விளையாடின. நாக் அவுட் சுற்றுக்கு முன்னேற முடியாவிட்டாலும் ஈரான், சவூதி அரேபியா நாடுகள் கடந்த காலங்களை விட நடப்பு சீசனில் ஆட்டத்

திறனை மேம்படுத்தி அசத்தியது. ஜப்பான், தென் கொரியா, ஆஸ்திரேலியா ஆகிய நாடு கள் லீக் சுற்றில் முன்னணி, சாம்பியன் அணி களுக்கு அதிர்ச்சி அளித்து நாக் அவுட் சுற்றுக்கு முன்னேறியது. நாக் அவுட் சுற்றில் ஆஸ்திரேலியா - அர்ஜெண்டினா அணியிட மும், ஜப்பான் - குரோஷியா அணியிடமும், தென் கொரியா - பிரேசில் அணியிடமும் வீழ்ந்து நாக் அவுட் சுற்றில் இருந்து வெளி யேறியது. பொதுவாக தென் அமெரிக்கா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா, வட அமெரிக்கா ஆகிய கண்ட அணிகள் மட்டுமே உலகக் கோப்பையில் ஆதிக்கம் செலுத்தி வந்த நிலை யில், நடப்பு சீசனில் ஆசிய கண்டங்களின் மிரட்டலான ஆட்டத்தால் மற்ற கண்ட நாடு கள் கதி கலங்கி போயின. முன்னாள் சாம்பி யன்களான உருகுவே அணியை தென் கொரியா அணியும், ஜெர்மனியை ஜப்பான் அணியும் லீக் வெளியேற்றி

எங்களுக்கும் (ஆசியாவிற்கும்) கால்பந்தில் மிரட்ட தெரி யும் என நிரூபித்து மற்ற ஆசிய நாடுகளுக்கு ஒரு புத்துணர்வை ஏற்படுத்தியுள்ளது.

# 32. டிசம்பர் 8, 2022

**’போர்ச்சுக்கல் கோல் மழை**

22-வது சீசன் உலகக்கோப்பை தொடரின் கடைசி நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் ரொனால்டோவின் போர்ச்சுக்கல் அணியும், சுவிட்சர்லாந்து அணியும் மோதின. இந்த ஆட்டத்தில் தொடக்கம் முதலே ஆதிக்கம் செலுத்திய போர்ச்சுக்கல் அணி, பிரம்மாண்ட முன்கள தாக்குதலை தொடுத்தது. ஆட்டத்தின் 17-வது நிமிடத்தில் போர்ச்சுக்கல் வீரர் ரமோஸ் கோல் கணக்கை துவக்க, 33-வது நிமிடத்தில் போர்ச்சுக்கல் அணியின் நட்சத்திர வீரர் பெபே கோலடிக்க சுவிஸ் ரசிகர்கள் அதிர்ச்சியில் உறைந்தனர். இரண்டாம் பாதியின் 51-வது நிமிடத்தில் ரமோஸ் (போர்ச்சுக்கல்)

மீண்டும் கோலடிக்க, அடுத்த 4 நிமிட இடைவெளியில் ராபேல் (55-வது நிமிடத்தில் - போர்ச்சுக்கல்) கோலடித்து அசத்த சுவிஸ் வீரர்கள் சோர்வடைந்தனர். சோர்வை போக்க சுவிஸ் வீரர் மானுவேல் 58-வது நிமிடத்தில் கோலடிக்க ஆட்டம் சற்று பரபரப்பானது. கோலடிக்க துவங்கியதால் சற்று ஆறுதல் மனதுடன் அடுத்த கோலுக்காக சுவிஸ் அணி ரசிகர்கள் தங்கள் அணியை கை தட்டி உற்சாகப்படுத்தினர். ஆட்டத்தின் 67-வது நிமிடத்தில் ரமோஸ் ஹாட்ரிக் கோலடிக்க, தோல்வியின் பாதையில் நாம் இருக்கிறோம் என்பதை உணர்ந்து சுவிஸ் ரசிகர்கள் கதறி அழுதனர். அடுத்தது பல முறை முயற்சி செய்தும், சுவிஸ் அணியால் மேற்கொண்டு கோலடிக்க முடியவில்லை. 5-1 என்ற கோல் கணக்கில் ஆட்டம் முடிவடையும் என எதிர்ப்பார்க்கப்பட்ட நிலையில், ஆட்டத்தின்

இறுதிக்கட்ட நிமிடத்தில் (90+2) போர்ச்சுக்கல் வீரர் லியாவோ கோலடித்தார். இறுதியில் 6-1 என்ற கோல் மழையில் போர்ச்சுக்கல் அணி அபார வெற்றி பெற்று காலிறுதிக்கு முன்னேறியது.

**போர்ச்சுக்கல் அணிக்குள் பிளவு?**

கால்பந்து உல கில் கணிக்க முடியாத அணியான போர்ச்சுக்கல் நடப்பு சீசனில் பிரம்மாண்ட பார்மில் உள்ளது. ரொனால்டோ, பெபே ஆகியோர் மட்டுமே சீனியர் வீரர்கள். மற்ற அனைவரும் பயமரியா இளம் வீரர் கள் என்பதால் கலக்கலான ஆட்டத்துடன் காலிறுதிக்கு முன்னேறியுள்ளது போர்ச்சுக் கல். சுவிஸ் அணிக்கெதிரான நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் ஒரே ஒரு அதிர்ச்சி சம்ப வத்தால் கால்பந்து உலகில் அதிர்ச்சி அலையை ஏற்படுத்தியது. அது யாதெனில் கால்பந்து உலகின் நட்சத்திர

வீரரும், போர்ச்சுக்கல் அணியின் கேப்டனுமான ரொனால்டோ தொடக்கத்தில் களமிறங்காமல் பெஞ்சில் அமர்ந்து இருந்தார். இது வேறு ஏதாவது வியூகமாக இருக்கலாம் என்று எண்ணப்பட்டது. ரொனால்டோ இல்லாமல் போர்ச்சுக்கலின் இளம் கன்றுகள் கோல் மழை பொழிய, அந்த அணியின் பயிற்சியாளர் சான்டோஸ் ரொனால்டோவிற்கு தொடர்ந்து ஓய்வு கொடுத்து ஆட்டத்தின் 73-வது நிமி டத்தில் களமிறக்கினார். ஆட்டத்தின் பெரும்பாலான நேரம் பெஞ்சில் இருந்ததால் ரொனால்டோ நாக் அவுட் சுற்றில் கோலடிக்கவில்லை. கேப்டன் ரொனால்டோ இல்லாமல் பயிற்சியாளர் சான்டோ ஸின் வியூகம் மற்றும் இளம் வீரர்களின் அபார ஆட்டத்தால் காலிறுதிக்கு முன்னேறிய போர்ச்சுக்கல் அணிக்கு பாராட்டுக்கள் குவிந்து வரும் நிலையில், ரொனால்டோ - பயிற்சியாளர் சான்டோஸ் இடையே

மோதலால் போர்ச்சுக்கல் அணிக்குள் பிளவு ஏற்பட்டுள்ளதாகவும், ரொனால்டோவின் ஈகோ பிரச்சனைதான் காரணம் என பல்வேறு தகவல் வெளியாகியுள்ளது.

**காலிறுதி ஆட்டங்கள்**

குரோஷியா - பிரேசில் நாள் : டிசம்பர் 9-ஆம் தேதி

அர்ஜெண்டினா - நெதர்லாந்து நாள் : டிசம்பர் 10-ஆம் தேதி

போர்ச்சுக்கல் - மொரோக்கோ நாள் : டிசம்பர் 10-ஆம் தேதி

இங்கிலாந்து -பிரான்ஸ் நாள் : டிசம்பர் 11-ஆம் தேதி

**இன்றும் ஓய்வு**

உலகக்கோப்பை கால்பந்து தொடருக்கு

புதனன்று ஒய்வு அளிக்கப்பட்ட நிலையில், வியாழனன்றும் ஓய்வு அளிக்கப்பட்டுள்ளது. வெள்ளியன்று இரவு காலிறுதி ஆட்டங்கள் நடைபெறும்.

ஆப்பிரிக்காவின் பெயரை காப்பாற்றிய இளங்கன்று மொரோக்கோ

கத்தார் உலகக்கோப்பை கால்பந்து தொட ரில் தற்போது நாக் அவுட் சுற்று நிறைவ டைந்து வெள்ளியன்று (டிசம்பர் 09) காலிறுதி ஆட்டங்கள் தொடங்குகிறது. செவ்வாயன்று நடை பெற்ற 7-வது நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் கோப்பை வெல்லும் அணிகளில் ஒன்றாக கருதப்பட்ட ஸ்பெ யின் அணி இளம் ஆப்பிரிக்க அணியான மொரோக் கோவிடம் 3-0 என்ற கணக்கில் (பெனால்டி சூட் அவுட்) வீழ்ந்து வெளியேறியது. 22-வது சீசனில் வழக்கம் போல நாக் அவுட்டில் தென்

அமெரிக்கா, ஐரோப்பா கண்டங்களைச் சேர்ந்த நாடுகள் ஆதிக்கம் செலுத்தி வருகிறது. ஆப்பிரிக்க கண்டம் இளங் கன்று மொரோக்கோ காலிறுதிக்கு முன்னேறிய நிலையில், சேர்ந்த நாடுகள் வெளியேறி விட்டது. வட அமெரிக்கா, ஆசிய கண் டங்களை போல நாக் அவுட்டில் ஆப்பிரிக்க கண்டம் வெளியேறும் என எதிர்பார்க்கப் பட்ட நிலையில், மொரோக்கோவின் அதிரடியால் ஆப்பிரிக்காவின் பெயர் இன்னும் கத்தார் சீசனில் சுழன்று வருகிறது.

**யாருக்கு தங்க காலணி?**

உலகக்கோப்பை தொடரில் அதிக கோலடிக்கும் வீரர்களுக்கு தங்க காலணி விருது வழங்கப்படும். இது உலகக்கோப்பைக்கு அடுத்து கால்பந்து உலகில் கவுரவமான பட்டம் என்பதால் தங்க காலணியை கைப்பற்ற ஒவ்வொரு சீசனிலும்

முட்டு மோதல் அதிகமாக இருக்கும். நடப்பு சீசனில் நாக் அவுட் சுற்று நிறைவு வரை பிரான்ஸ் வீரர் மாப்பே முதலிடத்தில் உள்ளார். மொரட்டா (ஸ்பெயின்), மெஸ்ஸி (அர்ஜெண்டினா), ராஷ்போர்ட், சாகா (இங்கிலாந்து), கிரெளட் (பிரான்ஸ்), வேலன்சியா (ஈகுவடார்), காக்போ (நெதர்லாந்து), ரிச்சர்லிசன் (பிரேசில்), ராமோஸ் (போர்ச்சுக்கல்) என 9 வீரர்கள் 3 கோல்களுடன் தங்க காலணியை பெற வரிந்து கட்டி வருகின்றனர். தங்க காலணி டாப் ஆர்டர் பட்டியலில் கால்பந்து உலகின் நட்சத்திர வீரர்கள் நெய்மார்( பிரேசில்), ரொனால்டோ (போர்ச்சுக்கல்) ஆகியோர் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

# 33. டிசம்பர் 9, 2022

கத்தார் உலகக்கோப்பை கால்பந்து சீசனில் நாக் அவுட் சுற்று நிறைவு பெற்ற நிலையில், அர்ஜெண்டினா, பிரேசில், குரோஷியா, நெதர்லாந்து, போர்ச்சுக்கல், மொராக்கோ, பிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய 8 அணிகள் காலிறுதிக்கு தகுதி பெற்றன. இந்நிலையில் காலிறுதி ஆட்டங்கள் வெள்ளியன்று தொடங்குகிறது.

இன்று காலிறுதி ஆட்டங்கள் தொடக்கம்

பிரேசில் - குரோஷியா

வெற்றி வாய்ப்பு

71% - 29%

கேப்டன்(நெய்மார்) - கேப்டன் (மோட்ரிச்) நேரம் :

இரவு 8:30 மணி இடம் : எஜுகேஷன் சிட்டி

பலம், பார்மில் இரு அணிகளையும் ஒப்பிடுகையில் பிரேசில் அணி பிரம்மாண்டமாக உள்ளது. அணியில் ஒற்றுமை, இளம் வீரர்களின் பறக்கும் ரன்னிங் (ஓட்டம்), இரு களத்திலும் (முன், பின்) தடுப்பாட்ட தாக்குதல் முறை, பயிற்சியாளரின் கண்டிப்பால் வீரர்கள் சுறுசுறுப்புடன் செயல்படுதல் போன்ற சிறப்பு அம்சங்களுடன் நாக் அவுட் சுற்றில் வெற்றி பெற்ற பிரேசில், குரோஷியா அணியை எளிதாக வீழ்த்தி அரையிறுதிக்கு முன்னேறும் என எதிர்பார்க்கப்படுகிறது. பல அனுபவ வீரர்கள் இருந்தும் பதற்ற பார்மின்மையால் குரோஷியா திக்கு திணறிதான் காலிறுதிக்கு வந்தது. இதனால் பிரேசிலை குரோஷியா வீழ்த்தி அரையிறுதிக்கு முன்னேறுவது சற்று சிரமமான காரியம். கள நடுவர் : மைக்கேல் ஓலிவர்

அர்ஜெண்டினா - நெதர்லாந்து

வெற்றி வாய்ப்பு

75% - 35%

கேப்டன் (மெஸ்ஸி) - கேப்டன் (விர்ஜில்) நேரம் : நள்ளிரவு 12:30 மணி (சனியன்று அதிகாலை) இடம் : லுசைல்

மெஸ்ஸியின் அனுபவம், இளம் வீரர்களின் மிரட்டலான அதிரடி, லீக், நாக் அவுட் சுற்றுகளின் ஆட்டத்திறன் ஆகியவற்றை உற்றுநோக்கினால் நெதர்லாந்தை வீழ்த்தி அர்ஜெண்டினா அணி எளிதாக அரையிறுதிக்கு முன்னேறும் என எதிர்பார்க்கப்படுகிறது. நெதர்லாந்து அணியும் அர்ஜெண்டினா அணியை போல சொதப்பல் இல்லாமல் சூப்பர் பார்மில் தான் காலிறுதிக்கு முன்னேறியது. இதனால் அரையிறுதிக்கு முன்னேற நெதர்லாந்து அணிக்கும் வாய்ப்புகள்

இருந்தாலும், பலம்,வீரர்களின் செயல்திறனில் அர்ஜெண்டினா பிரம்மாண்டமாக உள்ளது. புரியும்படி சொன்னால் அர்ஜெண்டினாவை நெதர்லாந்து சமாளிப்பது மிகவும் சிரமமான விஷயம் ஆகும். திறமையான பல இளம் வீரர்களை வைத்து ஏதேனும் மாயாஜால அதிர்ச்சி மூலம் நெதர்லாந்து அரையிறுதிக்கு முன்னேறினால் பார்க்கலாம்.

களநடுவர் : அந்தோனியோ மாத்யூ (ஸ்பெயின்)

**இவர் வேற மாதிரி**

உலகக்கோப்பையை மிரட்டும் பிரேசில் பயிற்சியாளர்

22-வது சீசன் உலகக்கோப்பையில் கோல் மழை, வீரர்களின் அதிரடி ஆட்டம், இளம் அணிகளின் அசத்தல் வெற்றி, சீனியர் நாடுகளின் அதிர்ச்சி தோல்வி என பல விசயங்கள்

அரங்கேறினாலும், ஒரே ஒரு சுவாரஸ்ய சம்பவம் மட்டும் இன்னும் குறிப்பிடாமல் உள்ளது. அது யாதெனில் கோப்பை வெல்லும் அணிகளில் ஒன்றாக கருதப்படும் பிரேசில் அணியின் பயிற்சியாளரின் குணநல அம்சங்கள் தான். பொதுவாக கால்பந்து உலகில் அணியின் பயிற்சியாளர்கள் வீரர்களுக்கு அறிவுரை வழங்க மைதானத்தில் கத்துவார்கள், ஒரு இடத்தில் இருக்க மாட்டார்கள், அங்கும் இங்கும் பதற்றத்தில் இருப்பார்கள், தங்கள் அணி கோலடித்தால் கொண்டாடுவார்கள், தோற்றால் எரிச்சல் அடைவார்கள். இதுதான் கால்பந்து உலகில் பயிற்சியாளர்களின் நிலை. ஆனால் பிரேசில் பயிற்சியாளர் டிடே இதற்கு எதிர்மாறாக உள்ளார்.

**டிடே குணநலன்கள்**

1. அமைதியாக ஆட்டத்தின் ஒவ்வொரு

நொடியையும், வீரர்களின் செயல்திறனையும் கணிப்பார்

2. மற்ற நாட்டினரை போல மைதானத்தில் வீணாக கத்த மாட்டார்.

3. ஒழுங்காக களத்தில் விளையாடவில்லை என்றால் கேப்டன் நெய்மாராக இருந்தாலும் பெஞ்ச்சில் தான்

4. களத்தில் வீரர்களுக்கு தேவையில்லாமல் மைதான அறிவுரை கிடையாது

5. ஆட்டத்தின் தொடக்கத்திலேயே வியூகம் கொடுத்துவிடுவார். அதனை தேர்வுக்கு படிப்பது போல மனப்பாடம் செய்து வீரர்கள் செயல்பட்டால் நல்லது. இல்லையென்றால்

பெஞ்ச்தான்

6. கோலடித்தால் கொண்டாட மாட்டார். சிறிய புன்னகை மட்டும் தான். (தென் கொரியா அணிக்கெதிரான நாக் அவுட் ஆட்டத்தின் கோலின் பொழுது நடனம் ஆடினார் - இது வானவில் தோன்றுவது போன்ற அறிய நிகழ்வாகும்)

7. வெற்றி வாய்ப்பு இருந்தால் மாற்று வீரர்களை மைதானத்தில் இறக்கி விடுவார்

8. தனிநபர் தங்க காலணி கனவு எல்லாம் டிடேவிடம் பலிக்காது

9. எரிச்சல், கோபம் எதுவும் கிடையாது

10. கண்ணசைவில் அணியின் கட்டுப்பாடு. டிடேவை பார்த்தாலே பிரேசில் வீரர்கள் ஆட்டத்திறனை மாற்றுகிறார்கள்

11. இளம் வீரர்கள், சீனியர்கள் வீரர்கள் யாராக இருந்தாலும் ஒரே கட்டுப்பாடுள்ள அறிவுரைதான் டிடேவின் கண்டிப்பால்தான் பிரேசில் வீரர்கள் கத்தார் சீசனில் எதிரணிகளை கதி கலங்க வைக்கின்றனர்.

**உலகக்கோப்பை கோப்பையா? சர்ச்சைக் கோப்பையா?**

உலகக்கோப்பை தொடரை கத்தாரிடம் கொடுத்து, உலகக்கோப்பை ஏற்பாடுகளில் வெளிநாட்டுத் தொழிலாளர்கள் நடத்திய விதம், சம்பளம், இறப்பு விகிதம், வெளிநாட்டு ரசிகர்களின் உடைக் கட்டுப்பாடு, வயது வந்தோர் பாலியல்

கட்டுப்பாடு, ஓரினச்சேர்க்கை, மதுபான தடை, பெண்களை லென்ஸ் கேமரா மூலம் ரகசிய மற்றும் வெளிப்படையான கண்காணிப்பு போன்ற பல்வேறு சர்ச்சைகளுடன் கத்தாரில் உலக கால்பந்து சுழன்று வரும் நிலையில் தற்போது பிட்ச் என்ற மைதான பிரச்சனையும் சர்ச்சை லிஸ்டில் சேர்ந்துள்ளது. இது உலகக்கோப்பை கோப்பையா? சர்ச்சைக் கோப்பையா? என்று விவாதம் நடத்துவதுதான் பாக்கி.

**மோசமான நிலையில் ஆடுகளங்கள்**

பாலைவன பூமியான கத்தாரில் கொளுத்தும் வெயிலால் மரங்கள் தானாக முளைக்க கூட வாய்ப்பில்லை. இப்படிப்பட்ட சூழ்நிலையில் 22-வது சீசன் உலகக்கோப்பை தொடருக்காக வெளிநாட்டில் இருந்து செயற்கையாக மண், களிமண் போன்றவற்றை இறக்குமதி செய்து

இயற்கைக்கு (விளையாட்டு சூழ்நிலை) மாறாக 7 கால்பந்து மைதானங்கள் அமைக்கப்பட்டது. ஒரு மைதானம் ஏற்கெனவே இருந்தது (லுசைல்). கிரிக்கெட் மைதானம் அளவிற்கு பிட்ச் பார்ம் பிரச்சனை தேவையில்லை என்றாலும், கால்பந்து மைதானத்திற்கு ஓரளவு பார்ம் தேவைப்படும். அதாவது அடிக்கடி ஆட்டங்கள் நடத்த வேண்டும், அப்படி நடத்தினால் மண் புரளும், புற்கள் பெரிதாக, புதிதாக முளைக்கும். ஆனால் கத்தார் மைதானங்கள் உலகக்கோப்பை தொடங்க 100 நாள்களுக்கு முன்பு தண்ணீர் தெளிக்கும் வேலைக்காக திறக்கப்பட்டது. முன்பு எந்த ஆட்டங்களும் நடத்தப்படவில்லை. பிட்ச் ரிப்போர்ட் கூட கிடையாது. இப்படி விதிமீறல் செயலில் கத்தார் மைதானங்களில் உலக அளவிலான போட்டிகள் நடத்தப்பட்டு வருவதால் வீரர்கள் கடுமையாக திணறி வருகின்றனர்.

எந்த மைதானங்களிலும் நன்கு பழக்கப்பட்ட அர்ஜெண்டினா, பிரேசில், பிரான்ஸ், இங்கிலாந்து, ஜப்பான், தென் கொரியா, ஆப்பிரிக்க அணிகள் வேகமாக ஓடி பந்தை விரட்டுகிறது, துரத்துகிறது.ஆனால் மற்ற அணிகள் ஓடவே போராடுகிறது.

## மாடு மேய்ந்து சென்ற பகுதி

பிட்ச் பகுதியே படுமோசமாக உள்ள நிலையில், கோல் கீப்பர் பகுதியை சொல்லவா வேண்டும். அப்பகுதி மாடு மேய்ந்து சென்ற தரைப்பகுதி போன்று களிமண் மட்டுமே காணப்படுகிறது. இதனால் கோல் கீப்பர், கோலடிக்க ஓடிவரும் வீரர்கள் தடுமாறி, வழுக்கி விழுகின்றனர்.

# 34. டிசம்பர் 10, 2022

**இன்றைய ஆட்டங்கள் (காலிறுதி)**

போர்ச்சுக்கல் - மொரோக்கோ

வெற்றி வாய்ப்பு

58% 42%

கேப்டன் (ரொனால்டோ) - கேப்டன் (சாய்ஸ்) நேரம் : இரவு 8:30 மணி / இடம் : அல் துமாமா

இந்த ஆட்டத்தில் யாருக்கு வெற்றி என திடமாக கருத்து கூற முடியாது என்றாலும், பலம், அனுபவம் அடிப்படையில் போர்ச்சுக்கல் அணிக்கு அரையிறுதி வாய்ப்பு பிரகாசமாக உள்ளது. லீக், நாக் அவுட் சுற்று ஆட்டங்களில் போர்ச்சுக்கல் அணி பிரம்மாண்ட வெற்றியுடன் காலிறுதிக்கு முன்னேறியது. அதே போல ஆப்பிரிக்காவின்

இளம் கன்றான மொரோக்கோ லீக் சுற்றில் பல சீனியர் அணிகளுக்கு அதிர்ச்சி வைத்தியம் அளித்தது மட்டுமல்லாமல், நாக் அவுட் சுற்றில் முன்னாள் சாம்பியனான ஸ்பெயின் அணியை பெனால்டி சூட் அவுட்டில் வீட்டுக்கு அனுப்பியது. பயமரியா பல இளம் வீரர்கள் இருப்பதும், தந்திரமான தாக்குதல் ஆட்டமும் மொரோக்கோ அணிக்கு கூடுதல் சாதகத்தை ஏற்படுத்தும் என்பதால் அந்த அணிக்கும் அரையிறுதிக்கு முன்னேறும் வாய்ப்பு உள்ளது. கள நடுவர் : பேகுன்டோ டெல்லோ (அர்ஜெண்டினா)

பிரான்ஸ் - இங்கிலாந்து

வெற்றி வாய்ப்பு

60% - 40%

கேப்டன் (லோரிஸ்) - கேப்டன் (ஹாரி) நேரம் : நள்ளிரவு 12:30 மணி (ஞாயிறன்று) இடம் : அல்

பாயித்

இரு அணிகளும் சரிசம பலத்தில் இருந்தாலும், பிரான்ஸ் அணி இங்கிலாந்து அணியை விட சற்று சூப்பர் பார்மில் உள்ளது. இதனால் திடமாக இந்த அணி தான் அரையிறுதிக்கு முன்னேறும் என உறுதியாக ஆருடம் கூற முடியாது. பிரான்ஸ் அணி பதுங்கி பாயும் வித்தியாசமான ஆட்டத்திறனை கொண்டது. அதாவது ஒவ்வொரு 10 நிமிடமும் ஆட்டத்திறன் மாறும்படியும், திடீரென தாக்குதல் நடத்தும் ஆட்ட நலன்களை கொண்டது. மேலும் நாக் அவுட் சுற்று வரை சொதப்பல் இல்லாமல் அசத்தலான வெற்றிகளுடன் காலிறுதிக்கு முன்னேறியுள்ள பிரான்ஸ் அணிக்கு அரையிறுதி வாய்ப்பு பிரகாசமாக உள்ளது. அதே போல இங்கிலாந்து அணி சிரமம் இல்லாமல் காலிறுதிக்கு முன்னேறினாலும், பதற்ற மேலாண்மையால் முக்கியமான கட்டங்களில்

இங்கிலாந்து வீரர்கள் பார்ம் பிரச்சனையை எதிர்கொள்கின்றனர். இதனை மாற்றினால் இங்கிலாந்து அணியும் அரையிறுதியில் காலடி வைக்கலாம்.

களநடுவர் : வில்டன் (பிரேசில்)

**கத்தாரில் உடைந்தது ரொனால்டோவின் அகந்தை**

கத்தார் உலகக்கோப்பை சீசனில் பல சர்ச்சையான விஷயங்கள் அரங்கேறினாலும், ரொனால்டோவின் போர்ச்சுக்கல் அணிக்குள் அரங்கேறிய “ஈகோ” பிரச்சனை கால்பந்து உலகில் தலைப்பு செய்தியாக உள்ளது. முதல் 2 லீக் ஆட்டங்களில் நன்றாக விளையாடிய போர்ச்சுக்கல் அணி, இளம் கன்றான தென் கொரிய அணிக்கெதிரான லீக் ஆட்டத்தில் கேப்டன் ரொனால்டோவின் 2 மிகப்பெரிய

தவறால் படுதோல்வியை சந்தித்தது. இதனால் போர்ச்சுக்கல் பயிற்சியாளர் சான்டோஸ் அணியில் பல்வேறு மாற்றங்களை செய்தார். முக்கியமாக கேப்டன் ரொனால்டோவை பெஞ்சில் அமர வைத்து, பெபேவிடம் கேப்டன் பொறுப்பை கொடுத்து, முன்களத்தில் போதிய அனுபவம் இல்லாத இளம் வீரர் ரமோஸை ரொனால்டோ இடத்தில் நிற்கவைத்து பல தைரியமான முடிவுகளை எடுத்தார். சான்டோஸின் முடிவுகள் அனைத்தும் வெற்றி பெற ரொனால்டோவை அவர் கண்டுகொள்ளவில்லை. பெயரளவுக்கு 73-வது நிமிடத்தில் ரொனால்டோவை களமிறக்கினார்.

களத்திலும் ரொனால்டோ கோபம் கலந்த புன்னகையுடன் இருந்தார். ரொனால்டோ இடத்தில் விளையாடிய ரமோஸ் ஹாட்ரிக் கோலடித்து போர்ச்சுக்கல் அணியை கரையேற்ற, போர்ச்சுக்கல் அணியில் ரொனால்டோ இல்லாமல்

சாதிக்கலாம் என்ற நிலை உருவாகியுள்ளது. இதற்கு எல்லாம் ரொனால்டோ தான் காரணம். கால்பந்து உலகில் முக்கிய நட்சத்திரமான ரொனால்டோ போர்ச்சுக்கல் அணியின் கேப்டன் மட்டுமல்ல, அந்த அணியின் அனைத்து விவகாரங்களையும் கையாளக்கூடிய முக்கிய நபர். மேலும் அணியின் கள ஆலோசகராகவும் உள்ளார். கிளப் போட்டிகளிலும் ஒவ்வொரு அணிகளும் (மான்செஸ்டர் யுனைடெட், ஜுவன்டஸ், ரியல் மாட்ரிட்) போர்ச்சுக்கல் அணியை போல ரொனால்டோவை கொண்டாட ஆரம்பித்தார்கள். இது ரொனால்டோவிற்கு சற்று தலைக்கனத்தை ஏற்படுத்த, அவர் தனக்காக ஒவ்வொரு ஆட்டத்திலும் ஆட ஆரம்பித்தார். கோலடிக்க மட்டுமே ஆசைப்படுவார். தான் கோலடிக்க மற்ற வீரர்கள் பாஸ் செய்யவில்லை என்றால் ஆத்திரத்தோடு கத்துவார். இது

ரொனால்டோவின் குணநலனாக வெளிப்பட்டது. இந்த குணம் தென்கொரியா அணிக்கெதிரான ஆட்டத்தில் வெளிப்பட்ட நிலையில், போர்ச்சுக்கல் அணியின் தேசிய உணர்வு கொண்ட பயிற்சியாளர் சான்டோஸ் பெஞ்சில் அமர வைத்து ரொனால்டோவின் சுயநலத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தார்.

**கால்பந்தில் "ஈகோ" என்ற வார்த்தை உச்சரிப்பில் கூட இருக்கக்கூடாது**

கால்பந்தில் "ஈகோ" என்ற வார்த்தை இருக்கக்கூடாது. அதுவும் அணியின் கேப்டன் - பயிற்சியாளர் இடையே ஈகோ இருந்தால் அணி சரியாக இருக்காது. பார்ம் பிரச்சனையில் சிக்கி உருக்குலைந்துவிடும். தற்போதைய நவீன கால்பந்து உலகில் ஒவ்வொரு அணியிலும் ஒன்றிரண்டு சீனியர் வீரர்கள்

மட்டும் உள்ளனர். மற்ற அனைவரும் இளம் வீரர்கள். கேப்டன் - பயிற்சியாளர் இடையே ஈகோ பிரச்சனை அணிக்குள் மாறுபட்ட அமைதியை உருவாக்கும். இந்தமாதிரியான சிறிய சச்சரவுகளை இளம்வீரர்கள் உள்வாங்கும் மனதை கொண்டவர்கள் என்பதால் அணிக்குள் பார்ம் பிரச்சனை உருவாக வாய்ப்புள்ளது. இதனை தொடக்கத்திலேயே சமாளிப்பது நல்லது. மேற்கொண்டு எண்ணெய் ஊற்றி சூடேற்றினால் கால்பந்து அணி கருகிவிடும்.

**தங்க கையுறை (வாய்ப்புள்ளவர்கள்)**

உலகக்கோப்பை தொடரில் சிறப்பாக செயல்படும் கோல்கீப்பர்களுக்கு தங்க கையுறை வழங்கப்படும். அதன்படி கத்தார் சீசனில் தங்க கையுறையை பெற வாய்ப்புள்ளவர்கள் பட்டியல்:

1.அலிசன் பெக்கர் (பிரேசில்) 2.எமிலியானோ

மார்டினெஸ் (அர்ஜென்டினா) 3.ஹ்யூகோ லோரிஸ் (பிரான்ஸ்) 4.டொமினிக் லிவாகோவிச் (குரோசியா) 5.யாசின் பவுனோ (மொரோக்கோ) 6.வோஜ்சிக் ஸ்செஸ்னி (போலந்து)

தங்கக் காலணிக்கு கோல்கள் கணக்கீடு போன்று தங்கக் கையுறைக்கு புள்ளிகள் கணக்கீடு கிடையாது. இதனால் தங்கக் கையுறை பெறுபவர்கள் பட்டியல் சற்று ரகசியமாக தயாரிக்கப்படுகிறது.

## 35. டிசம்பர் 11, 2022

### அரையிறுதியில் அர்ஜென்டினா

கத்தார் உலகக்கோப்பை தொட ரின் 2-வது காலிறுதி ஆட்டத் தில் அர்ஜெண்டினா அணி, நெதர் லாந்து அணியை எதிர்கொண்டது. தொடக்கம் முதலே பரபரப்பாக நடை பெற்ற இந்த ஆட்டத்தின் முழுநேர முடி வில் (90 நிமிடம்) இரு அணிகளும் 2 கோல்களுடன் சமனில் இருந்ததால் கூடுதல் நேரம் வழங்கப்பட்டது. கூடு தல் நேரத்தில் இரு அணிகளும் மேற் கொண்டு கோலடிக்காமல் இருந்ததால் பெனால்டி சூட் அவுட் முறை கடைபிடிக் கப்பட்டது. பரபரப்பாக நடைபெற்ற பெனால்டி சூட் அவுட்டில் அர்ஜெண்டினா 4-3 என்ற கணக்கில் வெற்றி பெற்று அரையிறுதிக்கு முன்னேறியது.

### தனி ஒருவரிடம் வீழ்ந்த பிரேசில்

கால்பந்து உலகில் நட்சத்திர கோல் கீப்பரான குரோஷியா வின் லிவாகோவிச் (27) அனைத்து நேரங்க ளிலும் சிறப்பாக செயல்படக்கூடியவர். அதி லும் பெனால்டி சூட் அவுட்டில் பதற்றமே இல் லாமல் வெற்றியை தேடித் தரக்கூடிய லிவா கோவிச், கடந்த நாக் அவுட் சுற்று ஆட்டத்தில் ஜப்பான் அணியிடம் இருந்து குரோஷியா வை பெனால்டி சூட் அவுட்டிலிருந்து மீட்டு காலிறுத்திக்கு அழைத்து அழைத்து வந்தார். அதே போல காலிறுதியில் தனி ஒருவராக பிரேசில் அணியிடம் இருந்து குரோஷியாவை காப்பாற்றி அரையிறுதிக்கும் அழைத்து வந் துள்ளார் லிவாகோவிச். சுருக்கமாக சொன் னால் குரோஷியாவிடம் பிரேசில் வீழ்ந்தது என்று சொல்வதை விட தனி ஒருவரிடம் (லிவா கோவிச்சிடம்) வீழ்ந்தது என்று தான் கூற வேண் டும்.

**கண்ணீர் கடலில் நனைந்த கத்தார் கனத்த இதயத்துடன் விடை பெற்றது மஞ்சள் படை**

உலகக்கோப்பை கால்பந்து வர லாற்றில் அனைத்து சீசன் களிலும் (22) பங்கேற்ற அணி யும், 5 முறை உலக சாம்பி யன் மகுடத்தை வென்ற பிரே சில் அணி 22-வது சீசனில் கண்டிப்பாக கோப்பை வெல் லும் என அடித்து கூறும் அள விற்கு லீக், நாக் அவுட் ஆட் டங்களில் மிரட்டலான ஆட் டத்தை வெளிப்படுத்தியது. ஆனால் முதல் காலிறுதி ஆட்டத்தில் குரோஷியா அணியிடம் கடுமையாக போராடி பெனால்டி சூட் அவுட்டில் (4-1) வெளியேறியது பிரே சில். இந்த அதிர்ச்சி தோல்வியால் பிரேசில் வீரர்கள் மைதா னத்திலேயே அழுதனர். இம்முறையும் கோப்பை இல்லாமல் வீட்டிற்கு செல்கிறோமே என மஞ்சள் படை (பிரேசில் ரசி கர்கள்) மைதானத்திலேயே கண்ணீர் விட்டு கதறியது. மஞ்சள் படையின்

கண்ணீரால் எஜுகேஷன் சிட்டி நகரமே அமைதியானது. இருப்பினும் கனத்த இதயத்துடன் தங்கள் அணிக்கு ஆறு தல் அளித்து சில ரசிகர்கள் கோஷங்கள் எழுப்பினர்.

**புகழ்பெற்ற கால்பந்து பத்திரிகையாளர் போட்டியின் போதே மரணம்**

புகழ்பெற்ற கால்பந்து பத்திரிகையாளர் கிராண்ட் வால் (48 - அமெரிக்கா) அர்ஜெண்டினா-நெதர்லாந்து அணிகள் மோதிய காலிறுதி ஆட்டத்தில் செய்தி சேகரிக்கும் பொழுதே மாரடைப்பால் (?) இருக்கையில் விழுந்து உயிரிழந்தார். நவம்பர் 21-ஆம் தேதி வேல்ஸ் - அமெரிக்கா (லீக்) ஆட்டத்தின் பொழுது ஓரினச்சேர்க்கை (LGBTQ) உரிமைகளுக்கு ஆதரவாக வால் ரெயின்போ டி-ஷர்ட்டை அணிந்து எதிர்ப்பு தெரிவித்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

# 36. டிசம்பர் 12, 2022



...

**மொராக்கோவின் உதை! - அ.பாக்கியம்**

நாக் அவுட் சுற்றில் பலம் வாய்ந்த ஸ்பெயின்

அணியை தோற்கடித்து கால் இறுதிக்கு வடக்கு ஆப்பிரிக்காவின் மொராக்கோ அணி முன்னேறி, அதிலும் போர்ச்சுக்கல்லை வீழ்த்தியுள்ளது. லீக் சுற்றில் ஒரு ஆட்டத்தில் மட்டும் குரோஷியாவுடன் சமன் செய்து, மற்றொரு பலம் வாய்ந்த ஐரோப்பிய அணியான பெல்ஜியம் அணியை தோற்கடித்து நாக்அவுட் சுற்றுக்கு முன்னேறிய நிகழ்வே, கால்பந்து ரசிகர்களை 'அதிர்ச்சிக்குள்ளாக்கி' மொராக்கோ மக்களை உறைய வைத்த நிலையில், போர்ச்சுக்கலையும் வீழ்த்தியது மொராக்கோ அணியின் சாதனையாகும். இந்த வெற்றி அதிர்ஷ்டத்தாலோ, தற்செயலாகவோ கிடைத்தது அல்ல. இளம் விளையாட்டு வீரர்களை பயிற்றுவித்து சாதித்த வெற்றியாகும்.

ஆப்பிரிக்க கண்டத்தில் இருந்து இதுவரை ஒரு அணியும் அரை இறுதிக்கு முன்னேறவில்லை. ஆனால், மொராக்கோ அணி அரை இறுதிக்குள்

நுழைந்து, ஆப்பிரிக்க கால்பந்தாட்டத்தை புத்துயிர் பெற செய்துள்ளது. இதற்கு முன்பு 1990 ல் கேமரூன், 2002ல் செனகல், 2010ல் கானா, தற்போது மொரோக்கோ என்று நான்கு அணிகள் மட்டும் தான் கால் இறுதி சுற்றுக்கு முன்னேறி வந்துள்ளன. 2010 ஆம் ஆண்டு கானா, உருகுவே அணியுடன் மோதிய பொழுது கானா அடித்த பந்தை உருகுவே நட்சத்திர வீரர் சொர்ஸ் கேவலமான முறையில் கையால் தடுத்து கானாவின் அரை இறுதிக் கனவை தகர்த்தார். இப்பொழுது மொராக்கோ, ஒட்டுமொத்த ஆப்பிரிக்க கால்பந்தாட்ட பிரதிநிதியாக அரை இறுதிக்கு முன்னேறியுள்ளது. உலக கால்பந்து போட்டியில் இதுவரை 13 ஆப்பிரிக்க நாடுகள் கலந்து கொண்டு உள்ளன. கேமரூன் (8), மொராக்கோ (6), நைஜீரியா (6), டுனீசியா(5), அல்ஜீரியா(4), கானா (4), ஐவரி கோஸ்ட் (3), எகிப்து

(3), செனகல்(3), தென் ஆப்பிரிக்கா (3), அங்கோலா (1), காங்கோ (1), டோகோ (TOGO) (1) என்ற விகிதத்தில் போட்டியில் கலந்து கொண்டுள்ளன. 1934ஆம் ஆண்டு முதன்முதலாக எகிப்து அணி ஆப்பிரிக்க கண்டத்தில் இருந்து உலகக்கோப்பை போட்டியில் கலந்து கொண்டது. அதன் பிறகு 36 ஆண்டுகள் கழித்து 1970 ஆம் ஆண்டு மொராக்கோ அணி உலகக் கோப்பை போட்டியில் கலந்து கொண்டது.

கால்பந்தாட்டத்தில் தொழில்நுட்பம் என்பது ஆதிக்கம் செலுத்தக்கூடிய அளவிற்கு வளர்ந்து விட்டது. ஐரோப்பிய அணிகள் தொழில்நுட்ப ஆட்டத்தை முன்னிறுத்தி; தென் அமெரிக்கா அணிகள் அழகியல் ஆட்டத்தை முன்னிறுத்தி; ஆப்பிரிக்க அணிகள் உடல் வலுவை முன்னிறுத்தி களம் இறங்குகிறார்கள். 1982ஆம் ஆண்டுகளில் இருந்து உலகக் கோப்பை கால்பந்தாட்டத்தை

பார்த்து வரும். ரசிகர்களைக் கேட்டால், தற்போது பொதுவாக அழகியல் ஆட்டம் குறைந்து இருப்பதாக கூறுவார்கள். மந்திரக் கால் மரடோனா முதல் ஐரோப்பாவின் இத்தாலி, ஜெர்மனி, பிரான்ஸ், ஸ்பெயின் மற்றும் தென்அமெரிக்காவின் பிரேசில் போன்ற நாடுகளை சேர்ந்த நட்சத்திர வீரர்கள் ஆட்டம் அழகியல் சார்ந்ததாக இருக்கும். பிரேசில் நாட்டின் ரொனால்டோ,ரொனால்டினோ ஆகியோர்களின் உடல் மொழிகள் காணக் கிடைக்காத காட்சிகளாக மைதானங்களில் அரங்கேறிக் கொண்டிருக்கும். ராபர்ட் டு கார்லோ சின் தொலைவில் இருந்து பந்தை கோல் கம்பத்திற்குள் செலுத்தும் நிகழ்வுகள் இதுவரை தற்போதைய உலகக் கோப்பை ஆட்டத்தில் கிடைக்கவில்லை. தற்பொழுது ஐரோப்பிய அணிகளில் அவ்வாறு கண்டுபிடிப்பது அரிதாக இருக்கிறது. பிரான்ஸ்

நாட்டின் எம்பாபே, ஜிரெட், தென் அமெரிக்காவின் மெஸ்ஸி மற்றும் பிரேசில் வீரர்கள் சிலரிடம் அழகியல் தன்மை மேலோங்கி இருக்கிறது.

ஆப்பிரிக்க வீரர்கள் ஐரோப்பிய கிளப்புகளில் இப்பொழுது கலக்கி வருகிறார்கள் என்று சொன்னால் மிகை ஆகாது. பாலன் டி ஓர் (Ballon d’or) என்ற பிரான்ஸ் நாட்டில் உருவாக்கப்பட்டு, சர்வதேச கால்பந்து ஆட்டத்தின் உயரிய விருதாக மாறி இருக்கக்கூடிய விருதுக்கு போட்டியிடக் கூடிய அளவுக்கு ஆப்பிரிக்க கால்பந்து வீரர்கள் முன்னேறி வருகிறார்கள். இருந்தும், அந்த நாட்டின் பொருளாதார நிலைமை ஐரோப்பிய நாடுகளைவிட, தென் அமெரிக்கா நாடுகளைவிட, வெகு தொலைவில் உள்ளது. கால்பந்தாட்ட அமைப்புகள் நிதிப் பற்றாக்குறையில் எப்பொழுதுமே சிக்கித் தவிக்கின்றன. பிரான்ஸ் கால்பந்தாட்டக் கழக 2021 ஆம் ஆண்டு பட்ஜெட்

257.0 மில்லியன் டாலர் ஆகும். ஆப்பிரிக்காவின் கேமரூன் நாட்டு 2020 ஆம் ஆண்டு கால்பந்தாட்ட கழகத்தின் பட்ஜெட் வெறும் 12 .7 மில்லியன் டாலர் மட்டுமே.

மற்றொரு காரணம் மிகக் குறைவான அணிகளே உலகக் கோப்பைக்கு வர முடிகிறது. 1998 ஆம் ஆண்டு ஆப்பிரிக்க கண்டத்திற்கு ஐந்து அணிகள் என்று ஒதுக்கப்பட்டது. அவற்றில் மூன்று அணிகள் மட்டும் தான் அப்போது தரம் வாய்ந்ததாக இருந்தது என்று அறிவிக்கப்பட்டதால் உள்ளே நுழைவதற்கு மிகப்பெரிய கடினமாக இருந்தது. 2026ஆம் ஆண்டு அமெரிக்கா, கனடா, மெக்ஸிகோ இணைந்து உலகக் கோப்பை கால்பந்து போட்டியை நடத்த இருக்கிறார்கள். அந்த போட்டியில் 32 அணிகளுக்கு மாறாக 48 அணிகள் என்று உயர்த்தப்பட உள்ளது. இதில் ஆப்பிரிக்க நாடுகளுக்கு கூடுதல் இடம்

கிடைக்க வாய்ப்பிருக்கிறது. மூன்றாவது காரணம் நீண்டகால திட்டமிடல் என்பது ஆப்பிரிக்க கால்பந்தாட்டக் கழகத்திடம் இல்லை. குறைந்தபட்சம் 12 ஆண்டுகளுக்கான திட்டமிடல் தேவை.

ஆப்பிரிக்க அணியின் வீரர்கள், நட்சத்திர வீரர்களை நம்பி மட்டும் களத்தில் இறங்க முடியாது என்பதை கற்று உணர்ந்திருக்கிறார்கள். அதில் சில மாற்றங்களும் தேவைப்படுகிறது. ஆப்பிரிக்க வீரர்களுக்கும் ,ஆசிய வீரர்களுக்கும் வெற்றி பெறுவதற்கு மைதானத்தில் மன அழுத்தம் ஒரு தடையாக இருக்கிறது. பிரேசில், பிரான்ஸ், ஸ்பெயின் போன்ற நாடுகளின் வீரர்கள் பந்தை எடுத்தவுடன், அதன் போக்கிலேயே பதற்றப்படாமல் கொண்டு செல்கிறார்கள். இதற்கு மாறாக ஆப்பிரிக்க விளையாட்டு வீரர்கள் பந்து கிடைத்தவுடன் அதன் மீது அழுத்தம் செலுத்தி

பதற்றப்படும் நிலை ஏற்படுகிறது.இதற்கான பயிற்சி தேவை என்று விளையாட்டு நிபுணர்கள் தெரிவிக்கிறார்கள். ஆப்பிரிக்க விளையாட்டுக் கழகங்கள் பயிற்சியாளர்களுக்கான முதலீட்டையும், விளையாட்டு வீரர்களுக்கான பயிற்சிக்கான முதலீட்டையும், அதிகப்படுத்த வேண்டிய தேவை இருக்கிறது. இருப்பினும், ஆப்பிரிக்க விளையாட்டு வீரர்களின் தற்போதைய முன்னேற்றம் மிக பிரமிக்கத்தக்கது. நாட்டின் அணிக்காக மட்டுமல்ல, ஐரோப்பிய நாட்டில் நடக்கக்கூடிய அனைத்து கிளப்களிலும் ஆப்பிரிக்க நாட்டு வீரர்களின் அசத்தலான ஆட்டம் மற்றவர்களை ஈர்க்கத் துவங்கி உள்ளது. ஆப்பிரிக்காவின் மொராக்கோ தற்போது மைதானத்தில் மட்டுமல்ல; கால்பந்து விழாவில் மக்களின் மனதிலும் இடம் பிடித்திருக்கிறது.

**2 நாட்கள் ஓய்வு**

22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து தொடரில் ஞாயிறன்று அதிகாலை காலிறுதி ஆட்டங்கள் நிறைவு பெற்ற நிலையில், டிசம்பர் 12,13 ஆகிய இரண்டு நாட்கள் ஓய்வு அளிக்கப்பட்டுள்ளது. மீண்டும் டிசம்பர் 14-ஆம் தேதி அதிகாலை அரையிறுதி ஆட்டங்கள் தொடங்குகின்றன.

**7-வது முறையாக மீண்டும் பிரான்ஸ்**

22வது சீசன் உலகக் கோப்பை கால்பந்து தொடர் தற்போது இறுதிக்கட்டத்தை எட்டியுள்ள நிலையில், ஞாயிறன்று அதிகாலை நடை பெற்ற கடைசி காலிறுதி ஆட்டத்தில் நடப்பு சாம்பியன் பிரான்ஸ் அணி, இங்கிலாந்து அணியை எதிர்கொண்டது. தொடக்கம் முதலே தாக்குதலை தொடங்கிய பிரான்ஸ் அணி ஆட்டத்தின் 17-வது நிமிடத்தில் கோல டித்தது.

பிரான்ஸ் வீரர் டச்சோமேனி அடித்த இந்த கோல் மிகவும் பிரம்மாண்டமானது ஆகும். பெனால்டி ஸ்பாட் உள்ளே வராமல் ட்ச்சோமேனி கோலடித்து கலக்கினார். ஆட்டத்தின் 54-வது நிமிடத்தில் பவுல் மூலம் பெனால்டி வாய்ப்பு கிடைக்க இங்கிலாந்து அணி கேப்டன் ஹாரி கோலடித்தார். கோல் கணக்கு சமன் ஆனதால் 55-வது நிமி டத்தில் இருந்து, இரு அணிகளும் தாக்குதல் பாணி ஆட்டத்தை தொடங்கியது. இதனால் ஒவ்வொரு நிமிடமும் பரபரப்பாக நகர இரு நாட்டு ரசிகர்களும் இருக்கை யில் அமராமல் நின்று கொண்டே போட்டியை ரசித்தனர். ஆட்டத்தின் 78-வது நிமிடத்தில் பிரான்ஸ் வீரர் கிரௌட் பல்வேறு தடுப்புகளை தாண்டி தலையால் முட்டி கோல டித்தார். 84-வது நிமிடத்தில் இங்கி லாந்து அணிக்கு கிடைத்த பெனால்டி வாய்ப்பை அந்த அணி கேப்டன் ஹாரி வீணடிக்க இங்கிலாந்து

ரசிகர்கள் கண்ணீர் வடிக்க ஆரம்பித்த னர். ஆட்டத்தின் கடைசி நிமிடத்தில் (90+8’) கிடைத்த ஸ்பாட் கிக் கோல் வாய்ப்பை இங்கிலாந்து வீரர் ராஷ்போர்ட் நூலிழையில் கோட்டை விட பிரான்ஸ் அணி 2-1 என்ற கோல் கணக்கில் அபார வெற்றி பெற்று, 7ஆவது முறையாக அரையிறுதிக்கு முன்னேறியது.

**பிரான்ஸ் அணியை தொடர்ந்து கரையேற்றும் கிரெளட்**

நடப்பு சாம்பியனான பிரான்ஸ் அணி கடந்த சீசனை போலவே கத்தார் சீசனிலும் சூப்பர் பார்மில் அரையிறுதிக்கு முன்னேறியுள்ளது. பிரான்ஸ் அணியில் மாப்பே, கிறிஸ்மேன், டெம்ப்லே போன்ற பல நட்சத்திர வீரர்கள் இருந்தாலும், இக்கட்டான சூழ்நிலையில் பிரான்ஸ் அணியை கரையேற்றுபவர் முன்கள

வீரர் கிரெளட்தான். நடப்பு சீசனில் கிரெளட் 4 கோலடித்துள்ளார். இந்த 4 கோல்களும் பிரான்ஸ் அணிக்கு இக்கட்டான சூழ்நிலையில் வெற்றியை தேடி தந்துள்ளது. காலிறுதி ஆட்டத்தில் கூட கிரெளட் அடித்த கடைசி நேர கோலால்தான் பிரான்ஸ் அணி அரையிறுதிக்கு முன்னேறியது.

**அரையிறுதி ஆட்டங்கள்**

அர்ஜெண்டினா - குரோஷியா நாள் : டிசம்பர் 14-ஆம் தேதி

பிரான்ஸ் - மொராக்கோ நாள் : டிசம்பர் 15-ஆம் தேதி

இரண்டு ஆட்டங்களும் நள்ளிரவு 12:30 மணிக்கு நடைபெறும்.

**தனிநபர் "ஈகோ" பிரச்சனையால் வெளியேறிய போர்ச்சுக்கல்**

## ரசிகர்களின் மனங்களை வென்ற ரொனால்டோ

தங்கள் (போர்ச்சுக்கல்) அணி தோற்றாலும், தோல்விக்கும் ரொனால்டோவிற்கும் எந்த பங்கும் கிடையாது. பயிற்சியாளர் சான்டோஸின் “ஈகோ” பிடிவாதத்தை நன்கு உணர்ந்த போர்ச்சுக்கல் ரசிகர்கள் ரொனால்டோவை களமிறக்க கோஷங்கள் எழுப்பினர். ஆனால் சான்டோஸ் கண்டுகொள்ளவில்லை. ஈகோவுக்கு பரிசாக இறுதியில் படுதோல்வி மட்டுமே கிடைக்க ரொனால்டோ கண்ணீருடன் முன்கூட்டியே மைதானத்தை விட்டு வெளியேறினார். அவருக்கு ஆறுதல் கூற சில ரசிகர்கள் மைதானத்தை விட்டு வெளியேறினர். மேலும் சமூக வலைத்தளங்களில் ரொனால்டோவிற்கு ஆதரவாக பல்வேறு ஹேஸ்டேக்குகள் டிரெண்ட் ஆகின. உலக்கோப்பையை கையில்

ஏந்தாவிட்டாலும், உலக கால்பந்து ரசிகர்களின் மனதை வென்றார் ரொனால்டோ.

கத்தார் சீசன் தொடரில் பிரம்மாண்ட பார்முடன் காலிறுதி வரை முன்னே றிய ரொனால்டோவின் போர்ச்சுக்கல் அணி, ஆப்பிரிக்காவின் இளம் அணியான மொராக்கோவிடம் 1-0 என்ற கோல் கணக்கில் வீழ்ந்து தொடரில் இருந்து வெளியேறியது. போர்ச்சுக்கல் அணியின் தோல்விக்கு காரணம் அந்த அணியின் ஆட்டத்திறன் அல்ல. போர்ச்சுக்கல் கேப்டன் ரொனால்டோ - பயிற்சியாளரின் ஈகோ பிரச்சனைதான். இந்த ஈகோ பிரச்சனை நாக் அவுட் முதலே இருந்த நிலையில், ரொனால்டோவை பெஞ்சில் அமர வைத்து கடைசி நேரத்தில் களமிறக்கி தனது ஈகோ பிரச்சனைக்கு நிவாரணம் தேடிக்கொண்டார் சான்டோஸ். மேலும் ரொனால்டோ இல்லாமல் இளம் வீரர்

ராமோஸால் போர்ச்சுக்கல் காலிறுதிக்கு கரையேற, சான்டோஸின் “ஈகோ” முற்றி, காலிறுதி ஆட்டத்தில் மொராக்கோவின் பலத்தை அறியாமல் நாக் அவுட் சுற்று போன்று ரொனால்டோவை மீண்டும் பெஞ்சில் அமர வைத்தார் சான்டோஸ். மொராக்கோவின் தாக்குதலை சமாளிக்க முடியாமல் போர்ச்சுக்கல் அணி வீரர்கள் தடுமாறினர். 42-வது நிமிடத்தில் மொராக்கோ கோலடிக்க பயிற்சியாளர் சான்டோஸ் அதிர்ச்சி அடைந்து 51-வது நிமிடத்தில் ரொனால்டோவை களமிறக்கினார். ரொனால்டோ களமிறங்கினாலும் மொராக்கோ அணியின் தாக்குதலை சமா ளித்து பதிலுக்கு கோலடிக்க முடியாமல் போர்ச்சுக்கல் அணி திணறியது. இறுதியில் மொராக்கோ அணி 1-0 என்ற கோல் கணக்கில் அபார வெற்றி பெற்று புதிய வரலாறுடன் அரை யிறுதிக்கு முன்னேறியது.

தோல்வியை ஜீரணிக்க முடியாமல் போர்ச்சுக்கல் ரசிகர்கள் கண்ணீர் விட்டு கதறினர்.

**சான்டோஸ் செய்த மிகப்பெரிய தவறு**



…

ரொனால்டோ மீதான விதிமீறல், சுய நலம்,

செயல்பாட்டின் வெறுப்பு ஒரு பக்கம் இருந்தாலும், ஆட்டத்தின் 20-வது நிமிடத்திலேயே போர்ச்சுக்கல் அணி மிக மோசமாக திணறியது. மாற்று கேப்டன் பெபே சரிவர ஆலோசனை வழங்கவில்லை. அவர் வெறுமென மைதானத்தில் சுழன்றார். போர்ச்சுக்கல் அணி திணறுவது நன்கு தெரிந்தும் முதல் பாதியில் ரொனால்டோவை பெஞ்சில் அமர வைத்து அழகு பார்த்தது மிகவும் தவறான செயல். இரண்டாம் பாதியில் ரொனால்டோ வருகைக்கு பிறகு போர்ச்சுக்கல் வீரர்கள் உற்சாகத்துடன் தாக்குதல் ஆட்டத்தை தொடங்கினர். ஆனால் போதியளவு நேரமின்மையால் தோல்வியை தழுவியது போர்ச்சுக்கல். ஈகோ ஒருபக்கம் இருந்தா லும், இது நாட்டு பெருமை தொடர்பான விஷயம் ஆகும். இதனை உணராமல் பயிற்சி யாளர் சான்டோஸ் செய்த மிகப்பெரிய தவறால் போர்ச்சுக்கல் நாடே சோகத்தில் மூழ்கியது.

# 37. டிசம்பர் 13, 2022










...

**புதனன்று அதிகாலை அரையிறுதி ஆட்டங்கள் தொடக்கம்**

22-வது சீசன் கத்தார் உலகக்கோப்பை தொடர் தற்போது இறுதிக்கட்டத்தை எட்டியுள்ள நிலையில், அர்ஜெண்டினா, குரோஷியா, பிரான்ஸ், மொராக்கோ ஆகிய நாடுகள் அரையிறுதிக்கு முன்னேறியது. 2 நாட்கள் ஓய்வுக்கு பின்னர் புதனன்று அதிகாலை 12:30 மணிக்கு அரையிறுதி ஆட்டங்கள் தொடங்கும் நிலையில், முதல் அரையிறுதி ஆட்டத்தில் அர்ஜெண்டினா - குரோஷியா ஆகிய நாடுகள் மோதுகின்றன.

**முதல் அரையிறுதி**

அர்ஜெண்டினா - குரோஷியா

வெற்றி வாய்ப்பு

58% 42%

அர்ஜெண்டினா - குரோஷியா கேப்டன் : மெஸ்ஸி - கேப்டன் : மெட்ரிச் நேரம் : நள்ளிரவு

12:30 மணி (புதனன்று அதிகாலை) இடம் : லுசைல் மைதானம் கள நடுவர் : டேனியல் ஓர்சட்டோ (இத்தாலி)

அர்ஜெண்டினா - குரோஷியா அணிகள் மோதும் முதல் அரையிறுதி ஆட்டத்தில் எந்த நாடு வெற்றி பெறும் என திடமாக கருத்து கூற முடியாது. காரணம் அர்ஜெண்டினா முன்களத்தில் பிரம்மாண்டமாக உள்ளது. குரோஷியா பின்களத்தில் சுவர் போன்ற அடித்தளத்தை கொண்டுள்ளது. முன்களத்தில் குரோஷியாவும், பின்களத்தில் அர்ஜெண்டினாவும் பார்ம் இன்றி உள்ளது. முக்கியமாக இரு அணிகளும் காலிறுதி ஆட்டத்தில் கடுமையான போராட்டத்திற்கு பிறகு பெனால்டி சூட் அவுட்டில் கீப்பர்களின் உதவியோடுதான் அரையிறுதிக்கு நுழைந்துள்ளன. குரோஷியா அணி காலிறுதியில் பலமான பிரேசில் அணியை வீழ்த்திய பார்மில்

இருப்பதால் அர்ஜெண்டினா சற்று கூடுதல் கவனமாக விளையாடினால் அரையிறுதிக்கு எளிதாக முன்னேறலாம்.

## இனி ஒவ்வொரு நிமிடமும் அனல் பறக்கும்

முதல் அரையிறுதி ஆட்டத்தில் கால்பந்து உலகில் தலைசிறந்த கீப்பர்களான எமி மார்டினஸ் (அர்ஜெண்டினா) - லிவாகோவிச் (குரோஷியா) இருவரும் களமிறங்குவதால் அர்ஜெண்டினா - குரோஷியா அணிகளின் ஆட்டத்தின் ஒவ்வொரு நிமிடமும் அனல் பறக்க வாய்ப்புள்ளது. காரணம் இரு அணிகளின் கீப்பர்களும் மிரட்டலான சுவர் தடுப்பாட்டத்தை கொண்டவர்கள். பெனால்டியில் இருவருமே கழுகு பார்வை கொண்டவர்கள். பந்து எப்படி பறந்தாலும் தடுத்து விடுவார்கள். இதில் சுவாரஸ்ய விஷயம் என்னவென்றால் எமி மார்டினஸ் (அர்ஜெண்டினா), லிவாகோவிச்

(குரோஷியா) ஆகிய இருவரும் தங்கள் நாட்டை அரையிறுதிக்கு அழைத்து வந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

**பந்து மாற்றம்**

குரூப், நாக் அவுட், காலிறுதி ஆட்டங்களில் அடிடாஸ் நிறுவன தயாரிப்பான “அல் ரிஹ்லா” என்ற பந்து பயன்படுத்தப்பட்ட நிலையில், அரையிறுதி, இறுதி ஆட்டங்களுக்கு பல்வேறு தொழில்நுட்பங்கள் பந்துக்கள் அடங்கிய “அல் ஹில்ம்” என்ற பந்து பயன்படுத்தப்பட உள்ளது.

**பந்துக்குள் சென்சார்**

1.கணிக்க முடியாத ஆப்சைட் முடிவுகளை சரியாக கணிக்க பந்திற்குள் “கனெக்டட் பால்” சென்சார் தொழில்நுட்பம் இடம் பெற்றுள்ளது. 2.வீரர்களின் ஆட்டத்திறன் கணிக்க முடியும் 3.வீடியோ காட்சிகள் போன்றவை தெளிவாக

அறிய முடியும் 4.சுற்றுச் சூழலை பாதுகாக்கும் வகையில் பந்து தயாரிக்கப்பட்டுள்ளது அடிடாஸ் நிறுவன தயாரிப்பில் தயாரான இந்த “அல் ஹில்ம்” பந்து அரேபிய மொழியில் “அல் ஹில்ம்” என்றால் கனவு என்று அர்த்தம் ஆகும்.

**அர்ஜெண்டினாவிடம் பிபா ஒழுங்கு விசாரணை**

உலகக்கோப்பை தொடரின் 2-வது காலிறுதி ஆட்ட த்தில் நெதர்லாந்து - அர்ஜெண்டினா அணிகள் மோதின. மிகவும் பரபரப்பாக நடைபெற்ற இந்த ஆட்டத்தில் அர்ஜெண்டினா பெனால்டி சூட் அவுட் வரை போராடி வெற்றி பெற்றது.ஆட்டத்தின் முடிவுகள் பிரச்சனையின்றி நிறைவு பெற்றாலும், இரு அணி வீரர்களும் பல விதிமீறல் சம்பவங்களில் ஈடுபட்டதால் இந்த ஆட்டத்தில் மஞ்சள் அட்டை மழை பொழிந்தது.

அதிகபட்சமாக அர்ஜெண்டினா அணிக்கு 10 மஞ்சள் அட்டைகள் கொடுக்கப்பட்டது. நெதர்லாந்து அணிக்கு 8 மஞ்சள் அட்டைகள் (ஒரு வீரர் 2 மஞ்சள் அட்டை பெற்றார்). அதிக மஞ்சள் அட்டை பெற்ற அர்ஜெண்டினா அணி மீது சர்வதேச கால்பந்து சம்மேளனம் (பிபா) விசாரணை நடத்தியது. ஆனால் விசாரணை முடிவுகள் வெளியாகவில்லை.

**வரலாறு படைத்த ஸ்பெயின் நடுவர்**

உலகக்கோப்பை கால்பந்து வரலாற்றில் அதிக மஞ்சள் அட்டை பெற்ற ஆட்டம் என்ற பெருமையை பெற்றது அர்ஜெண்டினா - நெதர்லாந்து அணிகள் மோதிய காலிறுதி ஆட்டம். மேலும் அதிக மஞ்சள் அட்டை கொடுத்த நடுவர் என்ற பெருமையை பெற்றார் மாத்யூ லஹோஸ் (ஸ்பெயின்).

**வீரர்கள் காயம்... கண்டுகொள்ளாத**

**நடுவர்கள்...**

காலப்பந்து விளை யாட்டில் மாற்று வீரர்கள் களமிறங்குதல், காயம், பெனால்டி, பவுல், சர்ச்சை கோல், ஆப் சைடு அறிவிப்பு என பல்வேறு சம்பவங்களும் நடுவரின் அறிவிப்பை பொறுத்துதான் ஆட்டங் களின் முடிவுகளும் இருக்கும். புரியும்படி சொன்னால் ஒரு கல்பந்து ஆட்டத்தின் ஒவ்வொரு நிமிடமும் நடுவரின் கட்டுப்பாட்டில்தான் இருக்கும். இதில் சுவாரஸ்யம் என்னவென்றால் வீரர்களை விட நடு வர்களுக்குதான் கால்பந்து விளை யாட்டில் முக்கிய நட்சத்திர அந்தஸ்து இருக்கும். இப்படி பல்வேறு சிறப்பு அம்சங்கள் உள்ள நிலையில், கத்தார் உலகக்கோப்பை சீசனில் டேனியல் (இத்தாலி), எல்பாத் (அமெரிக்கா), பாகனி (ஈரான்) போன்ற சீனியர் நடு வர்கள் ஆட்டம் மற்றும் வீரர்களின் நலனில் பொறுமையாக இருக்கின்ற

னர். ஆனால் மற்ற நடுவர்களின் செயல்பாடுகள் சர்ச்சையை ஏற்படுத்தி வருகிறது. குறிப்பாக சில நடுவர்கள் வீரர்கள் காயத்தால் துடிப்பதை கூட கண்டுகொள்ளாமல் போட்டியை தொடர்ந்து (பந்தை நகர்த்த) நடத்த அனுமதி வழங்கு கின்றனர். இது விதிமுறை மீறிய செயல் ஆகும். மேலும் மஞ்சள் அட்டை விதிப்பில் இளம் நடுவர்கள் பொறுமை இல்லாமல் கடும் கண்டி ப்புடன் நடந்து கொள்கின்றனர். இதனால் இளம் வீரர்கள் பதற்ற சூழ்நிலையை அடைகின்றனர்.

# 38. டிசம்பர் 14, 2022








...

**இறுதிக்கு முன்னேறுவது யார்?**

பிரான்ஸ்-மொராக்கோ வியாழனன்று

அதிகாலை பலப்பரீட்சை

கத்தார் உலகக்கோப்பை தொடர் இறுதிக்கட்டத்தை எட்டியுள்ள நிலையில், புதனன்று அரையிறுதி ஆட்டங்கள் தொடங்கியது. வியாழனன்று அதிகாலை நடைபெறும் 2-வது அரையிறுதியில் நடப்பு சாம்பியன் பிரான்ஸ் அணி, ஆப்பிரிக்க இளம் அணியான மொராக்கோவை எதிர்கொள்கிறது.

இரண்டாவது அரையிறுதி

பிரான்ஸ் - மொராக்கோ

வெற்றி வாய்ப்பு

பிரான்ஸ் - மொராக்கோ

63% 37%

நேரம் : நள்ளிரவு 12:30 மணி (வியாழனன்று அதிகாலை)

இடம் : அல் பாயித்

களநடுவர் : சீஸர் ரமோஸ் (மெக்ஸிகோ)

இரு அணிகளின் பலம், பார்ம் ஆகியவற்றை ஒப்பிடுகையில் பிரான்ஸ் அணி நல்ல நிலையில் இருப்பதால் அந்த அணி இறுதிக்கு முன்னேற சகல வாய்ப்புகள் உள்ளது. ஆனால் “இளம் கன்று பயமறியாது” என்பது போல நடப்பு உலகக்கோப்பை சீசனில் மிரட்டலாக விளையாடி, முதன்முறையாக (ஆப்பிரிக்க கண்டத்திலும்) அரை யிறுதிக்கு முன்னேறியுள்ள மொராக்கோ அணியை பிரான்ஸ் அணி கவனமாக எதிர்கொண்டால் இறுதி வாய்ப்பு நன வாகும். இந்த ஆட்டத்தில் ஆருட கணிப்புகள் கூற முடியாது. காரணம் மொராக்கோ கணிக்க முடியாத அணியாக இருப்பதால் ஆட்டத்தின் நிலைமை எப்பொழுது வேண்டுமானாலும் மாறலாம்.

இதனால் யாருக்கு வெற்றி என திடமாக கருத்து கூற இயலாது.

**6 அடியில் கலக்கும் மொராக்கோ...**

22-வது சீசன் உலகக்கோப்பை தொடரில் புதிய வரலாறுடன் அரையிறுதிக்கு முன் னேறியுள்ள ஆப்பிரிக்க இளம் அணி யான மொராக்கோ கத்தார் மண்ணில் சாதித்ததற்கு துல்லியமான ஆட்டத் திறன், இடைவெளி இல்லா சுழலும் சுறுசுறுப்பு, மின்னல் வேக ஓட்டம் என பல்வேறு காரணங்கள் இருந்தா லும், முக்கிய காரணமாக இருப்பது மொராக்கோ வீரர்களின் உயரம்தான். மொராக்கோ வீரர்கள் பெரும்பாலும் 6 அடிக்கு மேல் உயரமாக உள்ளனர். இதனால் எதிரணிகளின் கார்னர் கிக், ஸ்கை ஷாட், சூப்பர் ஷாட் போன்ற வாய்ப்புகளை அபாரமாக முட்டுதல் மூலம் தடுத்து விடுகின்றனர். எல்லா அணிகளிலும் ஒரே மாதிரி

உயர மான வீரர்கள் இருப்பதில்லை. ஆனால் மொராக்கோ அணியில் 80% வீரர்கள் 6 அடிக்குமேல் உள்ளனர். இந்த ஒரு பிளஸ் பாயிண்டால்தான் மொராக்கோ அணி அரையிறுதி வரை முன்னேறி அதிசயம் நிகழ்த்தி யுள்ளது.

இதில் சுவாரஸ்யமான விஷயம் என்னவென்றால் போதியளவு உயரமாக இருந்தால் சரியாக ஓட முடியாது என்ற வரலாறு இருந்தா லும், கடின பயிற்சியால் மொராக்கோ வீரர்கள் களத்தில் சிட்டுக்குருவி போல பறக்கின்றனர்.

**பாலஸ்தீனம் ஆதரவு பிரச்சனை**

பிரான்ஸ் - மொராக்கோ ரசிகர்களுக்குள் மோதல் உருவாக வாய்ப்பு?

உலகக்கோப்பை கால்பந்து வரலாற்றில் ஆப்பிரிக்க கண்டம் சார்பில் அரையிறுதிக்கு

முன்னேறிய அணி என்ற பெருமையை பெற்ற மொராக்கோ அணிக்கு விளையாட்டு உலகம் மட்டுமின்றி பல்வேறு தரப்பினரும் பாராட்டுக்கள் தெரிவித்தனர். ஆனால் பாராட்டுகளை விட பல்வேறு சுவாரஸ்ய மற்றும் சர்ச்சை சம்பவங்களும் அரங்கேறின.

**சுவாரஸ்யம்**

காலிறுதி வெற்றிக்கு பின் மைதானத்திலேயே பாலஸ்தீன நாட்டின் கொடியை மொராக்கோ வீரர்கள் கையிலேந்தி பாலஸ்தீனத்தை பாதுகாப்போம் என்ற கோரிக்கையுடன் கோஷங்களை எழுப்பினர். மொராக்கோ வீரர்களின் இந்த செயல் உலகம் முழுவதும் பரவ, பாலஸ்தீனத்தில் மொராக்கோ அணிக்கு நன்றி அறிவிப்பு பேரணியும், உலகக்கோப்பையை கைப்பற்ற மொராக்கோவிற்கு ஆதரவு

அளிப்பதாகவும், பாலஸ்தீனம் - மொராக்கோ கொடிகளை இணைத்து பல்வேறு ஊர்வலங்கள் பாலஸ்தீனத்தில் நடைபெற்றன.

**சர்ச்சை... பாரீஸ் கலவரம்...**

பிரான்ஸ் நாட்டில் ஆப்பிரிக்க ரசிகர்கள் மொராக் கோவின் காலிறுதி வெற்றியை கொண்டாடினர். சிலர் பாலஸ்தீன கொடியுடன் கொண்டாட பிரான்ஸ் போலீசார் கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர். ஒரு கட்டத் தில் பிரான்ஸ் போலீசாருக்கும் - ஆப்பிரிக்க ரசிகர்களுக் கும் மோதல் ஏற்பட்டு வன்முறை சம்பவங்களும் அரங்கேறின. கண்ணீர் புகைக்குண்டு, துப்பாக்கி முனை யில் போலீசார் வன்முறையை தடுக்க முயன்றனர். பதிலுக்கு தங்கள் வைத்திருந்த பட்டாசுகளை போலீசார் நோக்கி எரிய பாரிஸில் கலவரம் பூண்டது. கலவரம் ஒருவழியாக

கட்டுக்குள் வர, பிரான்ஸ் அணி அரையிறுதிக்கு முன்னேறி, மொராக்கோ அணியுடன் மோதும் சூழல் உருவாகியது. பிரான்ஸ் நாட்டில் பெரும்பான்மையாக வசிக்கும் ஆப்பிரிக்கர்கள் தனியாக பிரிந்து மொராக்கோவிற்கும், பிரான்ஸ் நாட்டவர்கள் தங்கள் தேசிய அணிக்கும் ஆதரவு பிரச்சாரம் மேற்கொண் டனர். இதனால் பிரான்ஸ் நாட்டில் பதற்றமான சூழல் உள்ளது. வியாழனன்று அரையிறுதி முடிவால் என்ன வேண்டுமானாலும் நடக்கலாம் என்பதால் பிரான்ஸ், இஸ்ரேல், பாலஸ்தீனத்தில் ரகசிய பாதுகாப்பு போடப் பட்டுள்ளது என தகவல் வெளியாகியுள்ளது.

## உலகம் முழுவதும் மொராக்கோவிற்கு பெருகும் ஆதரவு

தேசியத்தை கடந்து மொராக்கோ அணிக்கு உலகம் முழுவதும் ஆதரவு பெருகி வருகிறது.

கண்டத்தின் அடிப்படையில் ஆப்பிரிக்கர்கள் பிரிவினை இன்றி மொராக்கோவிற்கு ஆதரவாக கத்தாரில் குவிந்துள்ளனர். மொராக்கோ வீரர்களின் பாலஸ்தீன ஆதரவு சம்பவத்தால் பாலஸ்தீனம், பாலஸ்தீன ஆதரவு இஸ்ரேல் மக்கள், துருக்கி, துனிசியா உள்ளிட்ட பெரும்பாலான நாடுகளைச் சேர்ந்த பெரும்பாலான ரசிகர்கள் மொராக்கோவிற்கு ஆதரவாக களமிறங்கியுள்ளனர். மேலும் தங்கள் நாடு வெளியேறிய பொழுதிலும் பெரும்பாலான நாட்டின் ரசிகர்கள் மொராக்கோவின் மாயாஜாலத்தை காண கத்தாரில் பயண காலத்தை நீட்டித்துள்ளனர். இதுபோக கத்தாரில் பணிபுரியும் புலம்பெயர் தொழிலாளர்கள், இஸ்லாமிய நாடுகளான ஈரான், பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான் போன்ற நாடுகள் மொராக்கோவிற்கு ஆதரவு தெரிவித்து

சமூக வலைத்தளங்களில் டிரெண்டிங்கை உருவாக்கியுள்ளன.

பாலஸ்தீன பகுதியான காசாவில் நடைபெற்ற மொராக்கோ ஆதரவு கொண்டாட்டம்.

# 39. டிசம்பர் 15, 2022








...

ஆல்வரேஜ் கலக்கல் - இறுதியில் அர்ஜெண்டினா

கத்தார் உலகக்கோப்பை கால்பந்து தொடர் இறுதிக்கட்டத்தை எட்டியுள்ள நிலையில், புதனன்று நடைபெற்ற முதல் அரையிறுதி ஆட்டத்தில் 2 முறை சாம்பியனான அர்ஜெண்டினா அணியும், 21-வது உலகக்கோப்பை சீசனில் 2-ஆம் இடம் பிடித்த குரோஷியா அணிகள் மோதின. லுசைல் மைதானத்தில் நடைபெற்ற இந்த ஆட்டத்தின் ஒவ்வொரு நிமிடமும் பரபரப்பாக நகர்ந்தது. ஆட்டத்தின் 34-வது நிமிடத்தில் பவுலால் கிடைத்த பெனால்டி வாய்ப்பை அர்ஜெண்டினா அணி கேப்டன் கோலாக மாற்ற, குரோஷியா வீரர்கள் தடுப்பாட்டத்தை கைவிட்டு முன்களத்தில் ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்தனர். 39-வது நிமிடத்தில் அர்ஜெண்டினா இளம் வீரர் ஆல்வரேஜ் குரோஷியாவின் பல்வேறு தடுப்பு சுவர்களை கடந்து தந்திரமாக கோலடித்து அசத்தினார். முதல் பாதியில் அர்ஜெண்டினா 2-0 என்ற

கணக்கில் முன்னிலை வகித்தது. இரண்டாம் பாதியின் தொடக்கத்தில் குரோஷியா அணி சிறிது நேரம் ஆதிக்கம் செலுத்தியது. 55-வது நிமிடத்திற்கு பிறகு அர்ஜெண்டினா மீண்டும் பந்தை தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து 69-வது நிமிடத்தில் மெஸ்ஸியின் மாயாஜால கடத்தல் உதவியால் ஆல்வரெஜ் மீண்டும் கோலடிக்க, அர்ஜெண்டினா ரசிகர்கள் ஆரவாரம் செய்தனர். அவர்களின் ஆரவாரத்தால் லுஸைல் நகரமே அதிர்ந்தது. பல்வேறு முயற்சி செய்தும் குரோஷியாவால் பதிலுக்கு ஒரு கோல் கூட அடிக்க முடியவில்லை. இறுதியில் அர்ஜெண்டினா 3-0 என்ற கோல் கணக்கில் அபார வெற்றி பெற்று 6-வது முறையாக இறுதிப்போட்டிக்கு முன்னேறியது.

**விடைபெறுகிறார் மெஸ்ஸி...**

கத்தார் சீசன் உலகக்கோப்பை தொடர்தான்

கடைசி உலகக் கோப்பை என கால்பந்து உலகின் நட்சத்திர வீரரும், அர்ஜென்டினா கேப்டனு மான மெஸ்ஸி கூறியுள்ளார். அரையிறுதி போட்டி நிறைவு பெற்ற பின்பு அர்ஜென்டினா ஊடகம் ஒன்றுக்கு அளித்த பேட்டியில் மெஸ்ஸி கூறிய தாவது, “இதைச் சாதித்ததில் (இறுதிக்கு முன்னேற்றம்) மகிழ்ச்சியாக உள்ளேன். என்னுடைய உலகக்கோப்பைப் பய ணத்தை இறுதிச்சுற்றில் விளையாடி முடிக்கிறேன். அடுத்த உலகக் கோப்பை க்கு பல வருடங்கள் உள்ளன. என்னால் அந்த உலகக் கோப்பையில் விளையாட முடியும் எனத் தோன்றவில்லை. உலகக் கோப்பைப் பயணத்தை இதுபோல முடிப்பது சிறந்ததாகும். அர்ஜென்டினா அணி மீண்டும் உலகக் கோப்பை இறுதிச் சுற்றில் விளையாடுகிறது. அனைவரும் இத்தருணத்தை அனுபவிக்க வேண்டும்” எனக் கூறினார்.

**கோலடித்த மகிழ்ச்சியை மெஸ்ஸியுடன் கொண்டாடும் ஆல்வரேஜ்.**

**அர்ஜெண்டினா அரையிறுதியில் தோற்றது இல்லை**

உலகக்கோப்பையில் 2 முறை சாம்பியன் (1978,1986) பட்டம் வென்றுள்ள அர்ஜெண்டினா இதுவரை 6 முறை இறுதிக்கு முன்னேறியுள்ளது.(1930,1978, 1986, 1990, 2014,2022). 4 முறை காலிறுதி யில் (1966,1998, 2006, 2010) வெளியேறியுள்ள அர்ஜெண்டினா, ஒருமுறை கூட அரையிறுதி யில் அர்ஜெண்டினா தோற்ற வரலாறு கிடையாது.

**பதற்றம் இல்லாமல் அசத்திய அர்ஜெண்டினா...**

பொதுவாக உலகக்கோப்பையில் நாக் அவுட் ஆட்டங்களுக்கு பிறகு ஒவ்வொரு அணியும் பதற்றமாகத்தான் விளையாடும். காரணம்

கோப்பை கனவு, தேசியம் தொடர்பான அழுத்தம் என பல்வேறு கிளைமேக்ஸ் இருப்பதால் வீரர்களுக்கு அதிக பதற்றம் ஏற்படும். இதனால் சில அணிகள் பார்ம் பிரச்சனையில் சிக்கி விழிபிதுங்கும். ஆனால் 22-வது சீசன் முதல் அரையிறுதியில் அர்ஜெண்டினா வீரர்கள் பதற்றமே இல்லாமல் பயிற்சி ஆட்டங்களை போன்று விளையாடி கலக்கினர். இதில் சுவாரஸ்யமான விஷயம் என்னவென்றால் மெஸ்ஸி, மார்டினெஸ், டி பவுல் போன்ற வீரர்கள் மட்டுமே சீனியர்கள். மற்ற அனைவரும் இளம் வீரர்கள் என்றாலும், அவர்களும் இயல்பாகவே விளையாடி அசத்தினர்.பொதுவாக உலகக்கோப்பையில் நாக் அவுட் ஆட்டங்களுக்கு பிறகு ஒவ்வொரு அணியும் பதற்றமாகத்தான் விளையாடும். காரணம் கோப்பை கனவு, தேசியம் தொடர்பான அழுத்தம் என பல்வேறு கிளைமேக்ஸ்

இருப்பதால் வீரர்களுக்கு அதிக பதற்றம் ஏற்படும். இதனால் சில அணிகள் பார்ம் பிரச்சனையில் சிக்கி விழிபிதுங்கும். ஆனால் 22-வது சீசன் முதல் அரையிறுதியில் அர்ஜெண்டினா வீரர்கள் பதற்றமே இல்லாமல் பயிற்சி ஆட்டங்களை போன்று விளையாடி கலக்கினர். இதில் சுவாரஸ்யமான விஷயம் என்னவென்றால் மெஸ்ஸி, மார்டினெஸ், டி பவுல் போன்ற வீரர்கள் மட்டுமே சீனியர்கள். மற்ற அனைவரும் இளம் வீரர்கள் என்றாலும், அவர்களும் இயல்பாகவே விளையாடி அசத்தினர்.

## குரோஷியாவின் தோல்விக்கு காரணம்

காலிறுதியில் தடுப்பாட்டம் மற்றும் பெனால்டி அதிர்ஷ்டத்தில் பிரேசி லை வீழ்த்திய குரோஷியா, இதே பணியில் அர்ஜெண்டினாவை வீழ்த்தலாம் என்று களமிறங்கியது. முக்கியமாக அனைத்து

பிரிவிலும் பிரம்மாண்ட பார்மில் இருக்கும் அர்ஜென்டினாவை எளிதாக நினைத்து, அசால்ட்டாக விளையாடியது. சுனாமி வியூகம் அமைத்து வந்த அர்ஜென்டினா தொடக்கம் முதலே தாக்குதல் நடத்த குரோஷியா விழிபிதுங்கியது. இதுபோக குரோஷியா கேப்டன் மோட்ரிச் மந்தமாக புரியாத வியூகங்களை வீரர்களுக்கு கொடுக்க, அதை இளம் வீரர்கள் உள்வாங்க சிரமப்பட்டனர். இதுதான் குரோஷியாவின் தோல்விக்கு காரணமாக அமைந்தது.

**எளிமை நாயகன்...**

அர்ஜென்டினா ஆடும் ஆட்டங்களில் சாதாரண ஜெர்சி மற்றும் லோயர் (ஸ்போர்ட்ஸ் பேண்ட்) அணிந்து வீரர்களை நோக்கி சில உத்தரவுகளை மைதானத்தில் பறக்கவிட்டு மற்ற நேரம் அமைதியாக, சமத்து பிள்ளையாக

பெஞ்சில் அமர்ந்து இருக்கும் ஒரு எளிமையான நபர்தான் அர்ஜெண்டினா அணியின் தலைமை பயிற்சியாளர் லயோனல் ஸ்கலோனி. மற்ற அணி பயிற்சியாளர்களை போல விலை உயர்ந்த கோட் சூட், அதிகார மனப்பான்மை என பல்வேறு செயல்களில் ஆதிக்கம் செலுத்துவார்கள். ஆனால் ஸ்கலோனி வீரர்களின் ஆட்டத்திறன், வெற்றி, முன்னேற்றம் மட்டுமே எண்ணமாக செயல்படுகிறார்.

**கண் கலங்கிய ஸ்கலோனி**

அரையிறுதிக்கு முன் னேறிய சந்தோசம், மைதானத்தில் ரசிகர்களின் ஆரவாரத்தை கண்டு அர்ஜெண்டினா அணியின் தலைமை பயிற்சியாளர் லயோ னல் ஸ்கலோனி ஆனந்தத்தில் கண்ணீர் விட்டு அழுதார். அவரை கேப்டன் மெஸ்ஸி கட்டி அணைத்து ஆனந்த

ஆறுதல் வார்த்தை கூறினார்.

**சோதனைகளை சாதனைகளாக மாற்றிய ஸ்கலோனி...**

கத்தார் உலகக்கோப்பை தொடரின் தொடக்க ஆட்டத்தில் அர்ஜெண்டினா அணி இளம் கன்று சவூதியிடம் தோற்று பல்வேறு விமர்சனங்களை எதிர்கொண்டது. அர்ஜெண்டினா நடப்பு சீசனில் அவ்வளவுதான் என்றும், நாக் அவுட் கூற தேறாது என்று தலைப்பு செய்திகள் கூட வெளியாகியது. இதை எல்லாம் கண்டுகொள்ளாமல், பார்ம் பிரச்சனையில் இருந்த அணியை மீட்டு, இளம் வீரர்களை போர்ப்படை போன்று தயராக்கி இறுதிக்கு அழைத்துச் சென்று வரலாறு படைத்துள்ளார் பயிற்சியாளர் ஸ்கலோனி.

# 40. டிசம்பர் 16, 2022












...

22-வது உலகக் கோப்பை தொடர் இறுதிக் கட்ட த்தை எட்டியுள்ள நிலையில், வியாழ

னன்று நடைபெற்ற 2-வது அரையிறுதி ஆட்டத்தில் நடப்பு சாம்பியன் பிரான்ஸ் அணி, ஆப்பிரிக்காவின் இளம் அணியான மொராக்கோவை எதிர்கொண்டது. ஒட்டுமொத்த கால்பந்து உலகமே அதிகம் எதிர்பார்த்த இந்த ஆட்டம் அல் பாயித் மைதானத்தில் நடை பெற்றது. மொராக்கோ அணியின் பாய்ச்சல் வேக வரலாற்றை நன்கு உணர்ந்த பிரான்ஸ் அணி ஆட்டத்தின் முதல் நிமிடத்திலேயே தாக்குதலை தொடங்கியது. இதன் பலனாக ஆட்டத்தின் 5-வது நிமிடத்தில் பிரான்ஸ் வீரர் ஹெர்னாண்டஸ் தந்திரமாக கோலடித்து அசத்தி னார். 9-வது நிமிடத்தில் கிடைத்த எளிய வாய்ப்பை மொராக்கோ வீணடித்தது. முதல் பாதியில் 1-0 என்ற கோல் கணக்கில் பிரான்ஸ் முன்னிலை வகிக்க, 2-ஆம் பாதியில் மொராக்கோ அணி தாக்குதல் அனல் பறந்தது.

ஆனால் பிரான்ஸ் அணியின் கேப்டனும், கோல் கீப்பருமான லோரிஸ் மொராக்கோ வீரர்களின் தாக்குதலை தவிடு பொடி யாக்கினார். 79-வது நிமிடத்தில் பிரான்ஸ் அணியின் நட்சத்திர வீரர் மாப்பேவின் அபார கடத்தலின் உதவி யால், ரான்டல் கோலோ கோலடிக்க மொராக்கோ வீரர்கள் மைதானத்திலேயே துவண்டு சரிந்தனர். மொராக்கோ ரசிகர்கள் கதறி அழுக ஆரம்பித்த னர். அதன் பிறகு ஆட்டத்தின் இறுதி நிமிடம் வரை மொராக்கோ பதிலுக்கு ஒரு கோல் கூட அடிக்க முடிய வில்லை. இறுதியில் பிரான்ஸ் அணி 2-0 என்ற கோல் கணக்கில் அபார வெற்றியுடன் இறுதிப்போட்டிக்கு முன்னேறியது.

**4-வது முறையாக...**

உலகக்கோப்பை கால்பந்து வரலாற்றில் பிரான்ஸ் அணி 4-வது முறையாக (1998, 2006,

2018, 2022) இறுதிக்கு முன்னேறி யுள்ளது. இதில் 1998 (பிரான்ஸ்), 2018 (ரஷ்யா) ஆகிய தொடர்களில் சாம்பியன் பட்டம் வென்றுள்ள பிரான்ஸ், 1958 (ஸ்வீடன்), 1986-ஆம் ஆண்டு (மெக்ஸிகோ) தொடர்களில் 3-ஆம் இடமும், 1982-ஆம் ஆண்டு (ஸ்பெயின்) தொடரில் 4-ஆம் இடமும் பிடித்தது. மற்ற சீசன்களில் குரூப், நாக் அவுட், காலிறுதி சுற்றுகளில் வெளியேறியுள்ளது.

**கலவரம்**

பிரான்ஸ் அணி இறுதிக்கு முன்னேறியதை பாரிஸில் அந்நாட்டு ரசிகர்கள் பட் டாசு வெடித்துக் கொண்டா டினர். இந்த கொண்டாட்டத் தில் பிரான்ஸ் நாட்டில் புலம்பெயர்ந்துள்ள ஆப்பிரிக்கர்கள் மொராக்கோவிற்கு ஆதரவாக கொண்டாட்டத்திற்குள் புகுந்து கலக்கத்தை உண்டாக்க, வெடித்தது மோதல். பிரான்ஸ்

ரசிகர்கள் பட்டாசுகள் மூலம் தாக்குதல் நடத்த, ஆப்பிரிக்கர்கள் கல், தடிகளை எரிந்து தாக்குதலில் ஈடுபட்டனர். ஒருகட்டத்தில் பொறுமையிழந்த பாரிஸ் போலீசார் “கலக தடுப்பு காவலர்”களை களமிறக்கி வானில் துப்பாக்கிச்சூடு நடத்தி மோதலை தடுத்தனர். இந்த மோதலில் சிறுவன் ஒருவன் உயிரிழந்துள்ளான். பெல்ஜியத்திலும் ஆப்பிரிக்க ரசிகர்கள் மோதலில் ஈடுபட்டனர்.

**மொராக்கோ வீரர்களுடன் பாச மழை பொழிந்த பிரான்ஸ் வீரர்கள்**

2-வது அரையிறுதியில் முக்கிய சம்பவம் என்னவென்றால் பிரான்ஸ் அணி இறுதிக்கு முன்னேறியது என்பதை விட, ஆட்டம் முடிந்த பொழுது பிரான்ஸ் வீரர்கள் கொண்டாட்டங்களை குறைத்து மொராக்கோ வீரர்களை சமாதானப்படுத்தி, அவர்களை கட்டி

அணைத்து ஆறுதல் வழங்கினர். பிரான்ஸ் நட்சத்திர வீரர் மாப்பே, மொராக்கோ அணியின் நட்சத்திர வீரர் ஹக்கீமுடன் ஜெர்சி மாற்றலில் ஈடுபட்டு பிரான்ஸ், மொராக்கோ ரசிகர்களிடம் பாராட்டு மழையை பெற்றார்.

**மொராக்கோ அணியின் தோல்விக்கு காரணம்?**

1. 5-4-1 என்ற லைன் அப்பில் களமிறங்கியதால் முன்களத்தில் சரியாக செயல்படவில்லை. இதுதான் அணியின் தோல்விக்கு முக்கிய காரணம் ஆகும். 5-4-1 என்ற லைன் அப் மூலம் தடுப்பாட்டத்தை வைத்து பெனால்டியில் சாதிக்கலாம் என கனவுடன் இறங்கியது தவறாக அமைந்தது
2. பிரான்ஸ் அணியின் பலமான தடுப்பாட்டம் மற்றும் கோல் கீப்பர் லோரிஸின்

அனுபவத்தை குறையாக எடை போட்டு உதிரி ஷாட்களை விளாசியது. உதிரி ஷாட்களை பலம் வாய்ந்த பாஸ் ஷாட்களாக மாற்றியிருந்தால் மொராக்கோ 5 கோல்கள் போட்டிருக்கலாம்

3. கோல் கீப்பர் லோரிஸ் பல முக்கியமான ஷாட்களை தடுத்தது
4. 62% தனது கட்டுப்பாட்டில் பந்தை வைத்திருந்தாலும் கோலடிக்க வியூகம் அமைக்காமல் இருந்தது. பிரான்ஸ் 32% மட்டுமே பந்தை கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்தது. ஆனால் ஷாட்களில் பிரம்மாண்டமாக அசத்தியது
5. முன்கள வியூகத்தை விட்டு பிரான்ஸ் வீரர்களை தடுமாற வைக்க பல்வேறு வியூகம் அமைத்தது. மொராக்கோ வீரர்களின்

தடுப்பாட்ட தாக்குதல் வியூகத்தை நன்கு கணித்த பிரான்ஸ் வீரர்கள் கங்காரு போல தவ்விச் சென்று ஆதிக்கம் செலுத்தினர்.

**இன்னும் 2 நாட்கள்...**

இறுதி ஆட்டம்

அர்ஜெண்டினா - பிரான்ஸ் நாள் : டிசம்பர் 18-ஆம் தேதி - இரவு 8:30 மணிக்கு இடம் : லுசைல்

நாளை... 3-வது இடத்திற்கான ஆட்டம்

குரோஷியா - மொராக்கோ நாள் : டிசம்பர் 17-ஆம் தேதி - இரவு 8:30 மணிக்கு இடம் : கலீபா

**இந்தியாவிற்கு அவமானம்...**

வெறும் 3.7கோடி மக்கள் தொகை கொண்ட மொராக்கோ உலகக்கோப்பை கால்பந்தில் அரையிறுதிக்கு முன்னேறியுள்ளது. ஆனால் 140கோடி மக்கள் தொகையை கொண்ட இந்தியா

உலகக்கோப்பைக்கு தகுதிகூட பெறவில்லை. இது இந்தியாவிற்கு அவமானம் என உச்சநீதிமன்ற முன்னாள் நீதிபதி மார்க்கண்டேய கட்ஜு டுவிட்டரில் கருத்து தெரிவித்துள்ளார்.

# 41. டிசம்பர் 17, 2022








…

**யாருக்கு 3-வது இடம்**

குரேஷியா - மொராக்கோ இன்று பலப்பரீட்சை

22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து தொடர் இறுதிக்கட்டத்தை எட்டியுள்ள நிலையில், அர்ஜெண்டினா - குரேஷியா அணிகள் மோதிய முதல் அரையிறுதி ஆட்டத்தில் அர்ஜெண்டினா அணியும், பிரான்ஸ் - மொராக்கோ அணிகள் மோதிய 2-வது அரையிறுதியில் பிரான்ஸ் அணியும் வெற்றி பெற்று இறுதிக்கு முன்னேறின. இந்நிலையில், அரையிறுதியில் தோற்ற குரேஷியா - மொராக்கோ அணிகள் மோதும் 3-வது இடத்திற்கான ஆட்டம் சனிக்கிழமையன்று நடைபெறுகிறது.

யாருக்கு வெற்றி?

குரேஷியா - மொராக்கோ

வெற்றி வாய்ப்பு

குரேஷியா - மொராக்கோ

58% 42%

நேரம் : இரவு 8:30 மணி / இடம்: கலீபா / சேனல்: ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா

இரு அணிகளும் சரிசம பலத்தில் இருந்தாலும், யாருக்கு வெற்றி என திடமாக கருத்து கூற முடியாது. காரணம் இரு அணிகளும் தங்களது அரையிறுதியில் ஒரே மாதிரியான தோல்வியை சந்தித்துள்ளன. முன்களத்தில், தடுப்பாட்டத்தில் பலமாக உள்ள குரேஷியா அணி பார்ம் இன்றி உள்ளது. அதே போல தடுப்பாட்டத்தில் அசூர பலத்தில் உள்ள மொராக்கோ, கிடைக்கும் வாய்ப்பில் முன்களத்தில் அசத்துகிறது. குரேஷியா அணியை போல மொராக்கோவிற்கு பெரியளவு பார்ம் பிரச்சனை இல்லை என்றாலும், அரையிறுதி தோல்வி மனதளவில் தாக்கத்தை ஏற்படுத்தி உள்ளது. அதிர்ச்சி தோல்விகள் குரேஷியாவிற்கு

பழக்கம் என்பதால் அந்த தோல்வி பார்மில் சிக்க வாய்ப்பில்லை. ஆட்டத்திறன் மற்றும் பார்ம் பிரச்சனை பிரிவுகளை ஒப்பிடும் பொழுது குரேஷியா அதனை எளிதாக சமாளிக்கும் வாய்ப்பு உள்ளதால் குரேஷியாவிற்கு 3-ஆம் இடத்தை வெல்லும் வாய்ப்பு பிரகாசமாக உள்ளது. கோப்பை வாய்ப்பு கிடைக்கவில்லை, உலகக்கோப்பையில் 3-வது இடம் பெற்ற முதல் ஆப்பிரிக்க நாடு என்ற பெருமையை பெற்று வரலாறுடன் விடைபெற வரிந்து கட்டுவதால் மொராக்கோவிற்கும் 3-ஆம் இடத்தை வெல்லும் வாய்ப்பு உள்ளது. ஆனால் ஆட்டத்தின் போக்கை பொறுத்தே எல்லாம் அமையும். முன் ஆருடத்திற்கு வழி இல்லை.

நாளை...

உலகக்கோப்பை கால்பந்து இறுதி ஆட்டம் அர்ஜெண்டினா - பிரான்ஸ் நாள் : டிசம்பர் 18-ஆம்

தேதி / இரவு 8:30 மணிக்கு இடம் : லுசைல்

**தங்கப் பந்து**

1. மெஸ்ஸி (அர்ஜெண்டினா)

2. மாப்பே (பிரான்ஸ்) இருவர்கள் இருவரில் யாராவது ஒருவர் வாங்க 100 சதவீதம் வாய்ப்புள்ளது. மேலும் மோட்ரிச் (குரேஷியா), கிரிஸ்மேன் (பிரான்ஸ்), லிவாகோவிச் (குரேஷியா), ஹக்கீம் (மொராக்கோ) ஆகியோருக்கும் 70 சதவீதம் வாய்ப்பு உள்ளது.

**தங்கக் காலணி யாருக்கு?**

1. மெஸ்ஸி (அர்ஜெண்டினா) - 5 (பாஸ் கோல் - 3)

2. மாப்பே (பிரான்ஸ்) - 5 (பாஸ் கோல் - 2)

3. கிரெளட் (பிரான்ஸ்) - 4

4. ஆல்வரெஜ் (அர்ஜெண்டினா) - 4 கோல்கள் அடிப்படையில் சரிசமமாக இருந்தால் மற்ற வீரர்கள் கோலடிக்க பாஸ் செய்த உதவிகளின் எண்ணிக்கையை சேர்த்து தங்க காலணி விருது வழங்கப்படும்.

**தங்கக் கையுறை (கோல் கீப்பர்)**

1. மார்டியன்ஸ் (அர்ஜெண்டினா)

2. லோரிஸ் (பிரான்ஸ்)

3. லிவாகோவிச் (குரேஷியா)

4. யாசின் (மொராக்கோ) இவர்களில் யாருக்காவது வாய்ப்பு வழங்கப்படும். லிவாகோவிச் (குரேஷியா), மார்டியன்ஸ்

(அர்ஜெண்டினா) ஆகிய இருவர்களில் யாரேனும் ஒருவருக்கு அதிக வாய்ப்புள்ளது.

**மூடநம்பிக்கை ஜீவன்களை காணவில்லை...**

மூடநம்பிக்கை ஜீவன்களை காணவில்லை... உலகக்கோப்பை கால்பந்து தொடருக்காக ராணுவத்தில் பணியாற்றுவது போல வீட்டிற்கு கூட செல்லாமல் மாதக் கணக்கில் தீவிர பயிற்சி மேற்கொண்டு, குரூப் சுற்று முதல் இறுதி ஆட்டங்கள் வரை உறக்கம், உணவு, ஓய்வு என எந்த எதிர்பார்ப்பின்றி உலகக்கோப்பை தொடரில் விளையாடும் ஒவ்வொரு நாடுகளும் எதிர்கொள்ளும் இன்னல் இது. இது எல்லாம் நாட்டிற்காக என்று வீரர்கள் எதையும் கண்டுகொள்ளாமல் சந்தோசமாக இருப்பார்கள். வியர்வை ஆறு பாய்ந்து, ரத்தம் சிந்தி என பல்வேறு உடல்ரீதியான இன்னல்களையும்

சமாளித்து வீரர்கள் தங்களது திறமையை வெளிப்படுத்தும் இந்த கால்பந்து உலகில் 2010, 2014, 2018 ஆகிய 3 உலகக்கோப்பை தொடரில் நாய், பூனை, ஆக்டோபஸ், கிளி உள்ளிட்ட பிராணிகளை வைத்து யாருக்கு உலகக்கோப்பை? என்று அரையிறுதி முதல் ஆருடம் சொல்ல ஆரம்பித்து விடுவார்கள். ஆரம்பித்தார்கள். இந்த மூடநம்பிக்கையால் வீரர்களின் திறமையை இழிவுபடுத்தும் விதமாக அமைந்தது. புரியும்படி சொன்னால் மூடநம்பிக்கை தான் அந்த 3 தொடர்களில் ஆதிக்கம் செலுத்தியது. வீரர்களை ஒரு பொம்மையை போன்று பார்த்தார்கள் விளையாட்டின் அருமை புரியாத நபர்கள். ஆனால் நடப்பு சீசனில் அரையிறுதி நிறைவு பெற்ற தருவாயில் இதுவரை இந்த மூடநம்பிக்கை “ஆருட பிராணிகளையும்”, அதை வைத்து ஆதாயம் தேடும் மூடநம்பிக்கை ஜீவன்களையும் காணவில்லை.

# 42. டிசம்பர் 18, 2022

**மகுடம் யாருக்கு ?**

அர்ஜெண்டினா - பிரான்ஸ் இன்று பலப்பரீட்சை

அர்ஜெண்டினா - பிரான்ஸ்

நேரம்: இரவு 8.30 மணி இடம்: லுசைல்கள நடுவர்: சைமோன் மார்ஸிநியாக் போலந்து நாட்டைச் சேர்ந்த பிரபல நடுவரான சைமோன் மார்ஸிநியாக் மிகவும் கண்டிப்பான குணம் கொண்டவர். சேனல்: ஸ்போர்ட்ஸ் 18, ஜியோ சினிமா

22-வது சீசன் உலகக்கோப்பை கால்பந்து தொடர் அரபு நாடான கத்தார் நாட்டில் நடைபெற்று வருகிறது. தற்போது இந்த தொடர் கடைசி கட்டத்தை எட்டியுள்ள நிலையில், விடுமுறை

நாளான ஞாயிறன்று சாம்பியன் பட்டத்திற்கான இறுதி ஆட்டம் நடைபெறுகிறது. இறுதி ஆட்டத்தில் நடப்பு சாம்பியனான பிரான்ஸ் அணியும், 2 முறை சாம்பியனான அர்ஜெண்டினா அணியும் மோதுகின்றன.

**வெற்றி வாய்ப்பு**

50% - 50% உலகக்கோப்பை கால்பந்து தொடரின் இறுதி ஆட்டத்தில் இந்த அணிதான் கோப்பையை கைப்பற்றும் என திடமாக கணிக்க முடியாது. காரணம் இரு அணிகளும் மிரட்டலாக சரிசமமான பலத்தில் உள்ளன.

**நேருக்கு நேர்**

(உலகக்கோப்பை) மொத்தம் - 12 ஆட்டங்கள் வெற்றி அர்ஜெண்டினா - பிரான்ஸ் 6 - 3 டிரா -3

**பரிசுத்தொகை**

சாம்பியன் பட்டம் வெல்லும் அணிக்கு - ரூ.347 கோடி 2-ஆம் இடம் - ரூ.248 கோடி. இதுபோக, பங்கேற்ற அனைத்து நாடுகளுக்கும் பரிசுத் தொகை உள்ளது.

## கோப்பையுடன் விடைபெறுவாரா மெஸ்ஸி?

2005-ஆம் ஆண்டு முதல் அர்ஜெண்டினா அணிக்காக விளையாடி வரும் மெஸ்ஸிக்கு இது 5-வது உலகக்கோப்பை (2006, 2010, 2014, 2018, 2022) ஆகும். 5 உலகக்கோப்பையில் மொத்தம் 25 ஆட்டங்களில் விளையாடி 11 கோலடித்து அதிக கோல் அடித்த வரலாறுடன் (அர்ஜெண்டினா சார்பில்) டாப் ஆர்டரில் உள்ளார். 35 வயதாகிவிட்ட நிலையில், கத்தார் சீசன்தான் மெஸ்ஸிக்கு கடைசி உலகக் கோப்பையாகும். இதை அவரே அறிவித்துவிட்டார். இந்நிலையில் கோப்பையுடன் மெஸ்ஸி விடைபெறவும், கோப்பையோடு மெஸ்ஸி

விடைபெறவும் அர்ஜெண்டினா வீரர்கள் தீவிர பயிற்சியுடன் களமிறங்கியுள்ளனர்.

**மெஸ்ஸி களமிறங்குவாரா?**

குரோஷியா அணிக்கெதிரான அரையிறுதி ஆட்டத்தின் பொழுதே கால்பந்து உலகின் நட்சத்திர வீரரும், அர்ஜெண்டினா அணியின் கேப்டனுமான மெஸ்ஸி இடது காலில் தசைப்பிடிப்பால் அவதிப்பட்டார். இக்கட்டான சூழ்நிலையை கருத்தில் கொண்டு 100 சதவீத உடற்தகுதி இல்லாமல் களமிறங்கி விளையாடி ஒரு கோலும் அடித்து அணியை வழிநடத்தி இறுதிக்கு அழைத்து சென்றார். இந்நிலையில் இடது காலில் தசைப்பிடிப்பு மேலும் வீர்யமான நிலையில், வெள்ளியன்று நடைபெற்ற பயிற்சி ஆட்டத்தில் மெஸ்ஸி பங்கேற்கவில்லை. இதனால் இறுதி ஆட்டத்தில் மெஸ்ஸி களமிறங்குவது

சந்தேகம்தான் என தகவல் வெளியாகியுள்ளது. ஒருவேளை மெஸ்ஸி களமிறங்கவில்லை என்றால் அர்ஜெண்டினாவுக்கு மிகப்பெரிய இழப்பை ஏற்படுத்த வாய்ப்புள்ளது. மற்றொரு நட்சத்திர வீரர் டி மரியாவும் காயத்தால் ஓய்வில் உள்ள நிலையில், காயம் அர்ஜெண்டினாவிற்கு சிக்கலை ஏற்படுத்தியுள்ளது.

## தசைப்பிடிப்பால் விளையாட முடியுமா?

தசைபிடிப்பு என்பது தசை சுருங்கும் நிகழ்வு ஆகும். தசைகளின் நீர்ச்சத்து குறைபாட்டால் இது ஏற்படும். தசைப்பிடிப்பு ஏற்பட்டால் மற்ற விளையாட்டுகளில் ஓரளவு களமிறங்கி விடலாம். ஆனால் ஓட்டங்களைச் சார்ந்த முக்கிய விளையாட்டான கால்பந்து, ரக்பி, கூடைப்பந்து போன்ற விளையாட்டுகளில் விளையாடுவது சிரமம். முக்கியமாக கால்பந்தில் ஓடிக்கொண்டே

இருக்க வேண்டும் என்பதால் தசைப்பிடிப்பால் விளையாட முடியாது.

**மெஸ்ஸியின் கைக்கு அருகில் 2 விருது...**

உலகக்கோப்பையில் தங்க காலணி, தங்கப்பந்து, தங்க கையுறை, சிறந்த இளம் வீரர், வளரும் வீரர் என பல்வேறு விருதுகள் வழங்கப்படுகிறது. இதில் விருதை பெற அர்ஜெண்டினா வீரர் மெஸ்ஸி, பிரான்ஸ் வீரர் மாப்பே இருவருக்கும் கடும் போட்டி உள்ளது. தங்க காலணி, தங்கப்பந்து, தங்க கையுறை விருதுகள் முக்கியமானது. தற்போதைய நிலையில் தங்க காலணி, தங்கப்பந்து என இரண்டு விருதுகளையும் வெல்ல மெஸ்ஸிக்கு வாய்ப்புள்ளது. காயத்தால் அவதிப்படும் மெஸ்ஸி இறுதிபோட்டியில் பங்கேற்கவில்லை என்றால் தங்க காலணி, தங்கப்பந்து விருதுகளை பிரான்ஸ்

வீரர் மாப்பே பறித்துச் செல்ல வாய்ப்புள்ளது. தங்க கையுறை கோல் கீப்பருக்கு வழங்கப்படுகிறது.

பலத்த பாதுகாப்பு: கத்தார் சீசனில் கண்டங்களின் மோதல் உருவாகியுள்ளது. தென் அமெரிக்க கண்டமும் (அர்ஜெண்டினா) - ஐரோப்பிய (பிரான்ஸ்) கண்டமும் மோதுகிறது. இதனால் கத்தார், அர்ஜெண்டினா, பிரான்ஸ், பிரேசில் (அர்ஜெண்டினாவுக்கு எதிர்) ஆகிய நாடுகளில் பலத்த பாதுகாப்பு போடப்பட்டுள்ளது. இந்தியாவில் கேரளா, கோவா, தமிழ்நாடு (கன்னியாகுமரி,சென்னை, கோவை), மேற்கு வங்கம் ஆகிய மாநிலங்களில் லேசான கண்காணிப்பு போடப்பட்டுள்ளது.

# 43. தென் அமெரிக்கா கையில் உலகக்கோப்பை

டிசம்பர் 20, 2022

22-வது சீசன் உலகக்கோப்பை தொடர் அரபு நாடான கத்தாரில் கடந்த நவம்பர் 20-ஆம் தேதி தொடங்கியது. மொத்தம் 32 நாடுகள் பங்கேற்ற இந்த உலகக்கோப்பை தொடர் பிரம்மாண்ட செலவில் அமைக்கப்பட்ட, குளிரூட்டப்பட்ட 8 மைதானங்களில் நடைபெற்றது. சீனியர் நாடுகளின் அதிர்ச்சிகள், இளம் அணிகளின் கலக்கல் வெற்றி என குரூப் சுற்று முதலே ஒவ்வொரு ஆட்டமும் பரபரப்பாக நகர்ந்த நிலையில், 2 முறை சாம்பியனான அர்ஜெண்டினா அணியும், நடப்பு சாம்பியனான பிரான்ஸ் அணியும்

உலகக்கோப்பைக்கான பலப்பரீட்சையில் ஈடுபட்டது. ஞாயிறன்று லுஸைல் மைதானத்தில் நடைபெற்ற இந்த ஆட்டத்தின் முதல் பாதியிலேயே அர்ஜெண்டினா அணி 2 (மெஸ்ஸி 23’ (பெனால்டி) - ஏஞ்சல் டி மரியா ’35) கோல்கள் அடித்து அசத்தியது. அதன் பின்பு பிரான்ஸ் அணி கடுமையாக போராடியும் ஆட்டத்தின் 75-வது நிமிடம் வரை பதிலுக்கு கோலடிக்கவில்லை.

இதனால் ஆட்டம் நிறைவுபெறுகிறது. அர்ஜெண்டினா அணி கோப்பையை எளிதாக கைப்பற்றும் என எதிர்பார்க்கப்பட்ட நிலையில், பிரான்ஸ் நட்சத்திர வீரர் மாப்பே 80-வது நிமிடத்தில் (பெனால்டி) கோலடிக்க ஆட்டம் சற்று பரபரப்பானது. அடுத்த ஒரு நிமிட இடைவெளியில் மாப்பே மீண்டும் கோலடிக்க அர்ஜெண்டினா வீரர்கள், ரசிகர்கள் அதிர்ச்சியில் உறைந்தனர். ஆட்டத்தின் முழுநேரத்தில் இரு அணிகளும்

2-2 என்ற கோல் கணக்கில் சமனில் இருந்த நிலையில், கூடுதல் நேரம் வழங்கப்பட்டது. கூடுதல் நேரத்தின் 108-வது நிமிடத்தில் அர்ஜெண்டினா நட்சத்திரம் மெஸ்ஸி கோலடித்தார். கடுமையான போராட்டத்திற்கு பிறகு ஆட்டத்தின் கடைசி நிமிடத்தில் (108’) கிடைத்த பெனால்டி வாய்ப்பில் மாப்பே கோலடிக்க கூடுதல் நேரமும் 3-3 என்ற கோல் கணக்கில் சமனில் நிறைவடைந்தது. பிறகு பெனால்டி சூட் அவுட் முறை கடைப்பிடிக்கப்பட்டது. கடுமையான போராட்டத்திற்கு இடையே அர்ஜெண்டினா அணியின் கோல் கீப்பர் மார்டீன்ஸின் கலக்கலான ஆட்டத்தால் 4-2 என்ற கோல் கணக்கில் அபார வெற்றி பெற்று 3-வது முறையாக உலகக்கோப்பையை கைப்பற்றியது அர்ஜெண்டினா.

### ஆசானின் ஆசையை நிறைவேற்றிய வாரிசு...

அதிரடி ஆட்டம், மிரட்டலான ஓட்டம், வெளிப்படையான கருத்துக்கள், இடதுசாரி கொள்கைகளுக்கு அதிக முக்கியத்துவம், புரட்சி நாயகன் சேகுவேராவின் தீவிர ரசிகர், பிடல் காஸ்ட்ரோவுடன் நட்பு என கால்பந்து விளையாட்டு மட்டுமின்றி அரசியல், மக்கள் போராட்டம் என அனைத்து பிரிவுகளிலும் ஆல்ரவுண்டரான டீகோ மாரடோனா தன்னுடைய காலத்தில் உலகக்கோப்பையை கைப்பற்றியது போல, தனது வாழ்வின் கடைசி காலத்தில் அர்ஜெண்டினா கண்டிப்பாக கோப்பையை கையில் ஏந்த வேண்டும் என ஆசைப்பட்டார். இதற்காக மெஸ்ஸியை தனது விளையாட்டு வாரிசாக அறிவித்து, கோப்பையை கைப்பற்ற 2008-ஆம் ஆண்டு அர்ஜெண்டினா அணியின் தேசிய பயிற்சியாளர் பதவியை ஏற்று அணியை திறம்பட வழிநடத்தினார். 2010-ஆம் ஆண்டு தொடரில் (தென் ஆப்பிரிக்கா) காலிறுதி

வரை சென்ற அர்ஜெண்டினா எதிர்பாராவிதமாக ஜெர்மனி அணியிடம் 4-0 கணக்கில் தோற்க, கனத்த இதயத்துடன், கண்ணீர் தழும்ப பயிற்சியாளர் பதவியை ராஜினாமா செய்தார். அதன் பின்பு 2014, 2018-ஆம் ஆண்டு தொடரில் அர்ஜெண்டினாவின் முக்கிய ரசிகராக ஒவ்வொரு ஆட்டங்களிலும் உணர்ச்சி பொங்க ஆதரவளித்தார். ஆனால் மாரடோனாவின் கோப்பை கனவு மட்டும் நனவாகவில்லை. உடல்நலக்குறைவால் 2020-ஆம் ஆண்டு நவம்பர் 25-ஆம் தேதி மாரடோனா மறைந்த நிலையில், கத்தார் சீசனில் தனது ஆசானின் (மாரடோனா) கனவை கடுமையான போராட்டத்துக்கு இடையே நிறைவேற்றினார் வாரிசு (மெஸ்ஸி).

**கொண்டாட்டங்களால் மூச்சுத் திணறிய அர்ஜெண்டினா நகரங்கள்**

36 ஆண்டுகளுக்கு பிறகு உலகக்கோப்பையை வென்றுள்ளதால் அர்ஜெண்டினா நாட்டில் கிறிஸ்துமஸ் பண்டிகையை விட மிக பிரம்மாண்ட அளவில் கொண்டாட்டங்கள் அரங்கேறியது. அர்ஜெண்டினாவின் தலைநகர் பியூனஸ் அயர்ஸ் சதுக்கம் பகுதியில் மெஸ்ஸி 3 டி உருவத்துடன் சிறப்பு ஏற்பாடுகளுடன் கொண்டாட்டம் நடைபெற்றது. இந்த கொண்டாட்டத்தில் லட்சக்கணக்கில் மக்கள் கூடியதால் அங்கு மூச்சுத் திணறல் ஏற்பட்டது. இதுபோக அர்ஜெண்டினாவின் பல முக்கிய நகரங்களும் விழாக்கோலத்தில் சிக்கி உறங்காமல் விழித்திருந்தது.

**சொதப்பாமல் தடுத்த மார்ட்டீனஸ்...**

பதற்றமிக்க பெனால்டி சூட் அவுட்டில் மிகவும் கூலாக பிரான்ஸ் அடித்த 4 பெனால்டி

ஷாட்களில் 2 ஷாட்களை அபாரமாக தடுத்து உலகக்கோப்பையை தனது நாட்டிற்கு பெற்றுக்கொடுத்தார் அர்ஜெண்டினா கோல் கீப்பர் மார்ட்டீனஸ். முக்கியமாக இறுதி ஆட்டத்தில் மார்ட்டீனஸ் சொதப்பி இருந்தால் பிரான்ஸ் அணி கோப்பையை கைப்பற்றி இருக்கும். பெனால்டி சூட் அவுட்டில் 2 வாய்ப்பை தடுத்தது மூலம் மார்ட்டீனஸ் ஆடிய நடனம் கவனத்தை ஈர்த்தது.

**கூகுளில் 25 ஆண்டுகளில் இல்லாத அளவிற்கு நெரிசல்...**

உலகக்கோப்பை தொடரின் இறுதி ஆட்டத்தை கூகுள் தேடுதல் தளத்தில் ஒரே நாளில், ஒரே நேரத்தில் அதிகமான ரசிகர்கள் தேடியதால் முடக்கம் ஏற்படும் வகையில் 25 ஆண்டுகளில் இல்லாத அளவிற்கு நெரிசல் (டிராபிக்) ஏற்பட்டதாக கூகுள் தலைமை செயல் அதிகாரி சுந்தர் பிச்சை

தெரிவித்துள்ளார்.

**இதயங்களை வென்ற மாப்பே**




...

அர்ஜெண்டினா கோப்பையை வென்ற வரலாற்று மகிழ்ச்சி ஒருபக்கம் இருந்தாலும்,

ரசிகர்களின் இதயங்களை வென்றது பிரான்ஸ் இளம் வீரர் மாப்பேதான். 80-நிமிடம் ஆகிவிட்டது இனி எப்படி நாம் முன்னிலை கோலடிப்பது என்ற சிக்கலான, பதற்றமான நேரத்தில் ஒரே நிமிடத்தில் (80’ - பெனால்டி, 81 - டெக்னிக்கல் ஷாட்) அடுத்தடுத்து இரண்டு கோலடித்து அசத்தினார். மாப்பேவின் மிரட்டலால்தான் இறுதி ஆட்டம் 2-2 என்ற கணக்கில் பரபரப்புடன் கூடுதல் நிமிடமாக மாறியது. கூடுதல் நிமிடத்தில் மெஸ்ஸி (108’), பெனால்டி வாய்ப்பில் மீண்டும் கோலடித்து கால்பந்து உலகில் “ரத்த கொதிப்பை” ஏற்படுத்தி பெனால்டி சூட் அவுட் வரை அழைத்துச் சென்றார் மாப்பே. எனினும் பிரான்ஸ் வீரர்களின் சொதப்பல் மற்றும் அர்ஜெண்டினா கீப்பர் மார்ட்டீனஸின் கலக்கலான ஆட்டத்தால் மாப்பேவின் தனி நபர் போராட்டம் வீணாய் போனது. இருப்பினும் தனது துள்ளல் போராட்டத்தால் கால்பந்து ரசிகர்களின்

மனதை கொள்ளையடித்துச் சென்றார்.

**மெஸ்ஸிக்கு ராஜ மரியாதை அளித்த கத்தார் அரசு**



…

உலகக்கோப்பையை அர்ஜெண்டினா அணி

கேப்டன் மெஸ்ஸியின் கையில் கொடுக்கும் முன் “பெஷ்ட்” என்று அழைக்கப்படும் துணி “கோட்” அணிவிக்கப்பட்டது. இந்த வகை உடை அரேபியர்களுக்கு மிகவும் ஆடம்பரமான அதாவது ராஜ மரியாதை கொண்ட உடையாகும். மிக உயர்ந்த அளவிலான கொண்டாட்டத்திற்காக மட்டுமே இந்த மரியாதை அளிப்பார்கள். “பெஷ்ட்” அணிவித்தால் முழு மரியாதை உங்களுக்கு தரு கிறோம் என்று அர்த்தம்.




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின்

பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**எமது பணிகள்**

- **கணியம் மின்னிதழ்** kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- **கட்டற்ற தமிழ் நூல்கள்** FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில்

வெளியிடுகிறோம்.

- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல்

அனுப்புங்கள்.

### வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற

வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

**நன்கொடை**

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

